

# ஆண்டாள் அருளிய திருப்பாவை

## விளக்கவுரை:

சமரச வேதத்தின் முன்னோடி

கிருபானந்தன் பழனிவேலுச்சாமி

## திருப்பாவை 1

474 மார்கழித் திங்கள் மதி நிறைந்த
நன்னாளால் நீராடப் போதுவீர்
போதுமினோ நேரிழையீர்
சீர் மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச்
சிறுமீர்காள் கூர்வேல்
கொடுந்தொழிலன் நந்தகோபன்
குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளம்
சிங்கம் கார் மேனி செங்கண் கதிர்
மதியம் போல் முகத்தான்
நாராயணனே நமக்கே பறை
தருவான் பாரோர் புகழப்
படிந்தேலோர் எம்பாவாய் 1

சீதாபிராட்டியாரே கோதை அக்காவாக பூமாதேவியாரால் வெளிப்படுத்தப்பட்டார்

ஏனெனில் சீதை நோவுகள் தாளாமலேயே தன்னை ஏற்றுக்கொள்ளும்படியாக மன்றாடி பூமி பிளந்து அவரை ஏற்றுக்கொண்டது

மனிதகுலம் பூமியில் செய்துவரும் அக்கிரமங்களுக்கு படைப்புகள் அனைத்தையும் தனக்குள்ளிருந்து வெளிப்படுத்தும் பரமாத்மாவும் பொறுப்பேற்றாக வேண்டும்

சகலமும் அவருக்குள்ளிருந்து வெளிப்பட்டு அவருக்குள்ளேயே கிரியை செய்தும் வருகின்றன

1. ஆதியிலே வார்த்தை இருந்தது, அந்த வார்த்தை தேவனிடத்திலிருந்தது, அந்த வார்த்தை தேவனாயிருந்தது.

2. அவர் ஆதியிலே தேவனோடிருந்தார்.

3. சகலமும் அவர் மூலமாய் உண்டாயிற்று; உண்டானதொன்றும் அவராலேயல்லாமல் உண்டாகவில்லை.--யோவான் 1

குரான் 2:117. அல்லாஹ் வானங்களையும், பூமியையும் இல்லாமையிலிருந்தே உண்டாக்கினான்; அதனிடம் “குன்” - ஆகுக- என்று கூறினால், உடனே அது ஆகிவிடுகிறது

36:82. எப்பொருளையேனும் அவன் படைக்க நாடினால், அதற்கு அவன் கட்டளையிடுவதெல்லாம்; “குன்” (ஆய்விடுக) என்று கூறுவதுதான்; உடனே அது ஆகிவிடுகிறது

ஒன்றுமே இல்லாத வெட்ட வெளியே சகல பிரபஞ்சத்திற்கும் வெளியே இருக்கிறது என விஞ்ஞானத்தால் அறிகிறோம்

உலகில் வந்த சகல வேதங்களும் வெட்டவெளியே ஆதி இறைவன் என அறிவிக்கின்றன

சிவவாக்கியர் 534:
கட்டையால் செய் தேவரும் கல்லினால் செய் தேவரும்
மட்டையால்செய் தேவரும் மஞ்சளால்செய் தேவரும்
சட்டையால்செய் தேவரும் சாணியால்செய் தேவரும்
வெட்ட வெளிய தன்றிமற்று வேறுதெய்வம் இல்லையே.

சிவபோகசாரம் ; உபநிஷத்துககள் இன்னபிறவைகளிலும் உள்ளன

சிவாலயங்களில் லிங்கம் என்பதே அருவமும் உருவமும் இணைந்த ஒன்றாகும்

அருஉருவம் என்பார்கள்

சிவலிங்கம் என்றால் சிவனின் நாமத்தால் அருவத்தை வழிபடுகிறேன் என்பதே அர்த்தம்

அருவமான இறைவன் உருவமான படைப்புகளை படைத்த போது அவர் செய்ததெல்லாம் உண்டாகட்டும் என்று பேசினார்

அருவத்தில் இருந்து முதலில் வந்தது சத்தம் ; பிரணவம்

அதாவது வார்த்தை ; அந்த வார்த்தையே நாராயணன் ; படைப்புகளாக விரிந்தவன் ; பரமாத்மா ; பிரபஞ்சம்

நாராயணன் என்றால் சத்தமாக

வெளிப்பட்டவன் என்றே அர்த்தம்

இந்த பிரபஞ்சத்தில் ஜடமும் இயங்கும் பொருட்களும் கலந்தே இருக்கின்றன என்பதால் நாராயணனை அறிதுயில் கொள்ளுகிறவனாக ; பள்ளிகொண்டவனாக உருவம் சமைத்தார்கள்

ஆகவேதான் சகல பாவங்களுக்கும் தானும் பொறுப்பேற்று ஒவ்வொரு அவதாரத்திலும் துன்பத்தை சுமந்தே தீர்த்தும் வருகிறார்

திரேதா யுகத்தில் ராமராகவும் ; துவாபர யுகத்தில் கிறிஷ்ணராகவும் ; கலியுகத்தில் இயேசுவாகவும் அவதரித்து வந்தார்

ராமாவதாரத்தில் ஆயிரம் ஆண்டுகள் பூமியில் அவர் தர்மத்தை நிலைநிறுத்தினார்

அவரது சொந்த வாழ்க்கையோ இன்பம் என்பது அறவே இல்லை

மனைவியை மக்களை பிரிந்தே வாழ்ந்தார்

சீதை துன்பத்தை தவிர எதையுமே அனுபவித்ததில்லை

ஆனாலும் அவள் மனித பிறவி எடுத்த நிலையிலிருந்து மீண்டும் தேவராக மாற ஸ்ரீவில்லி யில் கோதையாக தன்னை வெளிப்படுத்தி தமிழால் பாடி மகிழ்ந்து ஸ்ரீரெங்கத்தில் ஒளிசரீ ரம் பெற்றாள்

கோதை அக்கா தமிழுக்கு கிடைத்த வரம்

வைணவத்தில் மனிதனாக பிறந்த யாருக்கும் கருவறையில் இடம் இல்லை

ஆனால் வைணவம் கோதையே சீதை என்றறிந்து கோவிலில் வைத்தார்கள்

அந்த முதல் கோவில் மதுரை கூடல் அழகிய பெருமாள் கோவிலில் உள்ளது

ஸ்ரீவில்லியில் இருந்து ஸ்ரீரெங்கம் செல்ல பல்லக்கு பரிவாரம் தந்தவன் பாண்டிய மன்னன்

அழகர் மலையில் ஒரு மண்டலம் தங்கி தன்

கைப்பட அழகனுக்கு சேவை செய்தாள் கோதை அக்கா

மதுரைக்கு அருகிலுள்ள சோழவந்தான் என்ற ஊர் வைகை என்ற வேகவதி கரையில் உள்ளது . அங்கு உள்ள தெய்வங்களுக்கு ஜனகை ஜனகை என முன் இணைப்பு இருக்கும்

ஜனகை பெருமாள் ; ஜனகை மாரியம்மன் என இருக்கும்

இரண்டாம் யுகத்தில் மிதிலை என்பது வேகவதி கரையில் இருந்த சோழவந்தனாகத்தான் இருந்தது ; சீதையை மனம் முடிக்க சோழ வம்ஸத்து ராமன் வந்ததால் இவ்வூரின் பெயர் சோழவந்தான் என ஆனது

இலங்கையில் படகில் வைத்து கடலில் விடப்பட்ட பேழை கங்கைக்கு செல்ல வாய்ப்பே இல்லை

ஆனால் அருகில் கடலில் கலக்கும் வைகை

வழியாக சோழவந்தானில் கரையேறவே வாய்ப்பு உள்ளது

ஆகவேதான் அவள் தமிழச்சியாகவே வந்தாள்

தமிழ் வார்த்தைகள் அவளிடம் கொஞ்சி விளையாடுவதை திருப்பாவை முழுவதும் காணலாம்

துன்பம் தீர நெய்யுண்ணோம் பாலுண்ணோம் மையிட்டு எழுதோம் என்ற விரதத்தை மார்கழியில் கடைபிடிக்க பெண்களுக்கு வழிகாட்டினாள்

அவளுக்கு தெரிந்த இன்னொரு ரகசியத்தை இப்பாடலில் வெளிப்படுத்தியுமுள்ளாள்

ராமரை காட்டுக்கு அனுப்பியதால் கைகேயியை பலரும் அறுவறுத்தார்கள் ; ஆனால் அன்பால் வளர்த்தவளை ராமன் மதிக்காமலில்லை

ஆகவேதான் கிறிஷ்ணாவதாரத்தில் தேவகியின் வயிற்றில் பிறந்தாலும் வளர்ப்பு

தாயான யசோதைக்குத்தான் மரியாதை

என்ன தவம் செய்தனை யசோதா ;எங்கும் நிறைந்த பர பிரம்மம் அம்மா என்றழைக்க

ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம் என்கிறாள் கோதை அக்கா

ஓம் நமோ நாராயணாய

நாராயணனாக வெளிப்பட்ட அந்த ஓர் இறைவனையே நமஸ்கரிக்கிறோம்

## திருப்பாவை 2

475 வையத்து வாழ்வீர்காள் நாமும்
நம்பாவைக்குச் செய்யும் கிரிசைகள்
கேளீரோ பாற்கடலுள்
பையத் துயின்ற பரமனடி பாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம்
நாட்காலே நீராடி
மையிட்டு எழுதோம் மலரிட்டு
நாம் முடியோம் செய்யாதன
செய்யோம் தீக்குறளைச்
சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும்
கை காட்டி உய்யுமாற் எண்ணி
உகந்தேலோர் எம்பாவாய்.
2

வையத்து வாழும் மனிதர்களாகிய சிறுவர்களுக்கு தாம் கொடுக்கும் செயல்முறை வேதாந்த உபதேசங்கள்

திருப்பாவை என்கிறார் கோதை அக்கா

பாவை என்றால் பருவவயதை தொடாத
பெண்பிள்ளை என்பதாம்

கள்ளம் கபடம் பேதம் உணராதவள்

பதின் ..
பத்து வயது சிறுமி!
பருவம் எய்தா .
பூப்பெய்தா சிறுமி

ஆன்ம வாழ்வில் அறியாமையால்
ஆத்மாக்கள் உழன்று வருகின்றன

மார்க்கத்துக்கு ஒரு கடவுள் இருப்பதாகவும்
எங்காளுதான் ஒரிஜினல் எனவும் சிறுவர்கள்
நினைக்கிறார்கள்

திருப்பாவையும் திருவெம்பாவையும்
இறைவன் ஒருவனே என சிறுவர்களுக்கு
செப்புகின்றன

சீர்மல்கும் ஆய்ப்பாடி செல்வ சிறுமீர்காள் என
முதல் பாடலிலேயே அக்கா சுட்டுகிறாள்

திருப்பாவை 30 ம் ஏலோரெம்பாவாய் என என் பாவையே என சிறுமியர்க்கு அறிவுரையாகவே பகரப்பட்டுள்ளது

திருவெம்பாவை 15 ம் ஏலோரெம்பாவாய் என என் பாவையே என சிறுமியர்க்கு அறிவுரையாகவே பகரப்பட்டுள்ளது

ஏல் ஓர் எம் பாவாய் என்பதே ஏலோரெம்பாவாய் என சொற்றொடர் ஆயிற்று

ஏல் என்றால் யூதபாஷையில் இறைவன்

என் மகளே இறைவன் ஒருவனே என்பாயாக என்பதே ஏலோரெம்பாவாய் சொற்றொடரின் அர்த்தம் - பரிபாஷை

கோதை அக்கா பெரியாள்வார் போன்ற பெரியவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும் போதே ஜோதியாக மாறி மறைந்து போனவர்

அவர் உடலோ ; சாம்பலோ கிடைக்கவில்லையே

அதேபோல சிதம்பரத்து பூசாரிகள் பலர் பார்த்துக்கொண்டிருக்கும் போதே மானிக்கவாசகர் ஜோதியாக மாறி மறைந்து போனவர்

அவர் உடலோ ; சாம்பலோ கிடைக்கவில்லையே

ஸ்தூல உடம்பை ஒளி சரீரமாக மாற்றும் தகுதி பெற்றோர் மரணமில்லா பெரு வாழ்வு என்ற தேவராக மாறுகிறார்கள் என வள்ளல் பெருமான் இதற்கு விளக்கம் கொடுத்தார்கள்

மனிதர்கள் அடையக் கூடிய உண்ணத நிலையை அடைந்தவர்கள் ஆண்டாளும் மாணிக்க வாசகரும்

இருவரும் சித்தி அடையும் முன்பு பாடியவையே ஏலோரெம்பாவாய் பாடல்கள்

கோவிலில் பூசாரி தீபாராதனை செய்யும் போது வழிபாடு செய்வது சரியை என்ற தாழ்ந்த நிலை

அப்படியில்லாமல் செய்கையால் ; உழைப்பால் ; வாழ்வால் இறைவனை நோக்கி வளர்வது கிரியை

உலகத்தார் உய்யுமாறு எண்ணி நான் கொடுத்த கிரியை பாவை நோன்பு என்கிறார் கோதை அக்கா

தேவர்களுக்கு அதிகாலை ஆகிய மார்கழி மாதம் முழுதும் அதிகாலை நீராடி அலங்காரங்களை தவிர்த்து தூய்மை விரதங்களை மனிதர்கள் மேற்கொள்ள வேண்டும்

பால் வெளி மண்டலத்தில் பிரபஞ்சம் மெல்ல இயங்கிக்கொண்டுள்ளது ; ஆனால் பிரபஞ்சம் ஜடாப்பொருளால் ஆனது

ஜடமாக இருந்தாலும் இயங்கிக்கொண்டுள்ளது

அவனே பரமன் - பரமாத்மா

அவன் சகலவற்றிக்கும் அடைப்படை - ஆதிமூலமாக இருப்பவன்

அவனை சற்குருவாக வைத்து இறைவனை தொழுதுகொள்ள வேண்டும்

ஏனென்றால் இறைவனின் வார்த்தை ஆனவன் நாராயணன்

உலகம் உய்யுமாறு காலம் காலமாக நாட்டுக்கு நாடு ஆங்காங்கு பகுதி பகுதியாக வேத ஆகமங்களை இறைவனே கொடுத்து வருகிறார்

அந்த வேதங்களை இறக்குபவர் நாராயணன் - ஜிப்ராயீல் - காப்ரியேல் என்ற அதிதேவர் என குரானிலும் பைபிளிலும் கூட சொல்லப்பட்டுள்ளது

ஆனால் கலிகாலம் முடியாததால் ; சத்திய யுகத்திற்கான காலம் கனியாததால் முழுமையான சமரச வேதம் வெளியாக்கப்படவில்லை

நாட்டுக்கு நாடு சமுதாய பண்பாடுகள் மாறுபாடானவை ஆதலால் அவர்களுக்குக்காக கொடுக்கப்பட்ட வேதத்தை

அடுத்த நாட்டில் கொண்டுவந்து திணித்து மல்லுக்கட்டிக்கொண்டு மனித சிறுவர்கள் மண்டைகளை உடைக்கிறார்கள்

ஆனால் ஐயங்களை தீர்த்து அருளை கருணையை கொடையாக்கி சமாதானம் சாந்தியை நிலை நிறுத்தும் சமரச வேதம் விரைவில் வெளியரங்கமாகும்

## திருப்பாவை 3

476 ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்
பாடி நாங்கள் நம் பாவைக்குச்
சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்
மும் மாரி பெய்து ஓங்கு பெறும்
செந் நெல் ஊடு கயலுகளப்
பூங்குவளைப் போதில் பொறி
வண்டு கண் படுப்பத் தேங்காதே
புக்கிருந்து சீர்த்த முலை பற்றி
வாங்க குடம் நிறைக்கும் வள்ளல்
பெரும் பசுக்கள் நீங்காத செல்வம்
நிறைந்தேலோர் எம்பாவாய்
3

உலகளந்த பெருமாள் உலகளந்த பெருமாள் என்பதை ஓங்கி உலகளந்த உத்தமன் என ஏன் அழைக்கிறாள் கோதை அக்கா ?

ஓங்கி என்றால் பலத்தை பிரயோகித்தல் அடக்குதல் என்பதாம்

ஓங்கி அடிச்சா ஒன்றரை டன் வெயிட்டுன்னு கேள்விப்பட்டிருப்பீர்களே

பெருமாள் யாரை அடக்கினார் எதற்காக அடக்கினார் ?

மகாபலி சக்கரவர்த்திக்கு தானம் செய்கிறேன் என்ற சுயமகிமையே தடையாகி விடுகிறது . சுயத்தை நிக்கிரகம் செய்தால் ஒழிய அவருக்கு முழுமை கொடுக்க முடியாது . ஆகவே திரிவிக்ரமனாக வந்த பரமாத்மா ; ஜீவாத்மாவின் ஆணவம் , கன்மம் , மாயைகளை வெற்றிகொள்ள மூவடி யாசகம் கேட்கிறார்

சிறுவனுக்கு மூவடிதானே என தானம் கொடுத்து விடுகிறார் மகாபலி

ஒரே அடியில் உலகம் முழுவதும் அளந்தார் . அடுத்த அடியிலோ பிரபஞ்சம் முழுவதும் அளந்து விட்டார் மூன்றாவது அடிக்கோ இடமில்லை . தன்னை அவருக்கு கீழ்படிதலுள்ளவானாகி தன் தலையில் பாதம் வைக்கும்படியாக - அவரின் பாதத்தில்

ஒன்றுவதைத்தவிர வேறு வழி இல்லாமல்போகிறது .

சித்தி வளாகத்தில் தான் சித்தி ஆகும் நாளை முன்குறித்து விட்டார் வள்ளல் பெருமான்

பிரியாவிடை போல பேருபதேசமும் செய்தாயிற்று

எல்லா ஏற்பாடுகளும் முடிந்து விட்டன

ஆனாலும் ஆண்டவர் என்னை வெட்கப்படுத்த மாட்டார் என்ற வாசகம் வள்ளல் பெருமானிடமிருந்து வருகிறது

அது எவ்வளவுதான் வல்லமை வரங்கள் கொடுக்கப்பட்டிருந்தாலும் கொடுத்த இறைவனே பெரியவர் என்பதாகும்

கொடுத்தவர் நினைத்தால் திரும்ப பெற்றுக்கொள்ள முடியும்

உள்ளார்ந்த சரணாகதியை வெளிப்படுத்தியவர் வள்ளலார்

ஏற்கனவே ஒளிசரீரம் பெற்று பரலோகத்தில் இருந்தவர் வள்ளலார் என்ற குடமுழுக்கு யோவான் என்ற எலியா. எலியாவாக அவர் இஸ்ரேலில் ஞானியாக இருந்த சமயத்தில் நித்திய ஜீவனை பெற்றவர்

மரணமில்லா பெருவாழ்வு ; ஆண்டவர் வருகை பற்றி சைவர்களுக்கு அறிவிக்க இறைவனால் தமிழகத்திற்கு அனுப்பட்டவர்

அவரே என்னை இறைவன் வெட்கப்பட வைக்க மாட்டார் என நம்புகிறேன் என்று சொன்னால் நம்மைப்போன்ற சாதாரண ஆட்கள் எவ்வளவு சரணாகதி தத்துவத்தை கற்றுக்கொள்ள வேண்டும்

சித்தி அடைவதற்கு புண்ணியமும் தடை ஆகி விடும் ; பாவம் எவ்வளவு தடையோ அவ்வளவு புண்ணியமும் தடை ஆகிவிடும்

புண்ணியத்தை இறைவனுக்கே அர்ப்பணித்து விட்டு சாந்தியாக வேண்டும்

நன்மை தீமைகளை கடந்து விட வேண்டும்

இருமைகளை கடந்து விடு என்று கீதை உபதேசிக்கிறது

எல்லா புகழும் இறைவனுக்கே

எதையும் திருடிக்கொள்ளாதே

என் குருநாதர்களுள் ஒருவரான நாமக்கல் மகானை சென்று தரிசித்த போது எனக்கு அவர் கைப்பட தேநீர் போட்டு கொடுத்தார் . பேசிக்கொண்டே காலி கிளாசை அவரிடம் நீட்ட எத்தனித்து அவர் திடுக்கிட்டதுபோல கண்டு எழுந்து சென்று கழுவி வைத்தேன்

அவர் காலடியில் அமர்ந்தேன்

உபதேசித்துவிட்டு திருக்கோவிலூர் செல் என்றார்

உடனே புறப்பட்டு திருக்கோவிலூர் வந்து ஊர் முழுக்க சுற்றினேன்

ஆதியிலே மண்டுக முனிவரின் ஆசிரமம் இருந்த இடம்

மண்டு என்றால் முட்டாள்

முட்டாள் முனிவராக ; குருவாக உயர்ந்த இடம்

மகாபலி சக்ரவர்த்தியின் கர்வத்தை கருவறுத்தவராக நாராயணன்

அந்தகார அசுரனை அழித்தவராக சிவபெருமான்

மத்வ முனிவர் ஒருவரின் ஜீவசமாதி

மெய்ப்பொருள் நாயனார் சமாதி

முதல் ஆழ்வார்கள் மூவர் சம காலத்தில் தமிழகத்தில் இருந்தாலும் அவர்கள் தற்செயலாக ஒரு குறுகிய கீற்று கொட்டாகையில் மழைக்கு ஒதுங்கிய ஊர் திருக்கோவிலூர்

அருவமான ஒருவர் நாலாவதாக தங்களை நெருக்குவதை உணர்ந்து நாராயணனே வந்திருப்பவர் என உணர்கிறார்கள்

பாசுரம் பாட தொடங்குகிறார்கள்

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச் – செய்ய
சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன்
சொல்மாலை
இடர்ஆழி நீங்குகவே - (பொய்கையார்)

அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா – நன்புருகி
ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ் புரிந்த நான் (பூதத்தாழ்வார்)

திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன்
திகழும்
அருக்கன் அணி நிறமும் கண்டேன் – செருக்
கிளரும்
பொன் ஆழி கண்டேன் புரிசங்கம் கண்டேன்
என்ஆழி வண்ணன்பால் இன்று (பேயாழ்வார்)

ஆழ்வார்கள் பாசுரம் பாடி தமிழையும்
பக்தியையும் வளர்த்தார்களே ; அதில் முதல்
மூன்று பாசுரம் பாடப்பட்ட ஊர்
திருக்கோவிலூர்

பாடவைத்தவர் பரமாத்மா

இப்பேற்பட்ட அந்த புண்ணிய ஷேத்ரத்தின் உபதேசம் சுயத்தை விட்டு விடு ; சரணாகதியை கற்றுக்கொள் என்பதாகும்

எந்த பெருமையையும் இறைவனுக்கே அர்ப்பணித்து விடு ; திருடிக்கொள்ளாதே என்பதாகும்

அந்த உத்தமனின் பேர் பாடி நமது ஆத்மாவுக்கு சரணாகதியை உபதேசித்தால் அருட்செல்வமும் பொருட்செல்வமும் நிறைந்தவராக உயர்வோம்

**திருப்பாவை 4**

477 ஆழி மழைக் கண்ணா ஒன்று நீ
கை கரவேல் ஆழி உள் புக்கு
முகந்து கொடு ஆர்த்து ஏறி
ஊழி முதல்வன் உருவம் போல்
மெய் கறுத்துப் பாழிய் அம்
தோளுடைப் பற்பனாபன் கையில்
ஆழி போல் மின்னி வலம்புரி
போல் நின்று அதிர்ந்து தாழாதே
சார்ங்க முதைத்த சர மழை போல்
வாழ உலகினில் பெய்திடாய்
நாங்களும் மார்கழி நீராட
மகிழ்ந்தேலோர் எம்பாவாய்
4

மழைக்கு என்று ஒரு தேவர் இருக்கிறார் ; அவர் பெயர் வருணன்

அப்படியிருக்க மழையை கண்ணன் என்றே உருவகப்படுத்துகிறாளே கோதை அக்கா ?

இந்த கலிக்காலத்தில் ஒழுங்காக மழை பெய்யாது என்பதால் ஆழி மழையாகிய கண்ணா ; கரவேல் ; ஏமாத்தாதே என்று சொல்கிறாள்

விஞ்ஞானம் கடல் நீர் ஆவியாகி மேகமாக மாறுகிறது என்கிறது

அப்படியானால் கடந்த வருடங்களில் வெயில் கொளுத்தோ கொளுத்தோ என கொளுத்தியும் மேகம் உருவாகவில்லை

கோதை அக்கா சொல்கிறாள் : கிறிஷ்ணரின் கரம் கடல் தண்ணீரை முகர்ந்து வானத்தில் ஏற்றி விடுகிறதாம்

யுகங்களை மாற்றும் அதிகாரம் பெற்றவர்கள் நர நாரணர்கள் ; அதில் முதல்வன் நாராயணன் ; ஊழி முதல்வன்

அவன் நிறம் போல மேகம் கருத்து அவன் கையில் உள்ள சக்ராயுதம் போல மின்னி சங்கு போல அதிர்ந்து இடி இடித்து ; அவனது வில்லாகிய சாரங்கத்திலிருந்து புறப்படும்

அம்புகள் போல மழை பெய்கிறதாம்

வருணன் என்றொரு மழைத்தேவர் இருப்பதையே மறைத்து ;எல்லாமே நாராயணன் என்கிறாளே அக்கா

இதன் செய்தி என்னவென்றால் ;அது வைணவத்தில் உள்ள ஏக வழிபாட்டு கொள்கை

ஏக இறைவழிபாடு ;ஏக இறைவழிபாடு என்று இசுலாமியர் ;சன்மார்க்கிக்களும் சொல்கிறார்களே ;வைணவமும் ஏக வழிபாட்டு கொள்கையில் உள்ளதுதான்

சகல தேவர்களும் நாராயணனிலிருந்தே வியாகப்பட்டுள்ளனர்

அவர்கள் தனித்த பிரகிரதிகளாக இருந்தாலும் நாராயணனுக்குள் அடக்கம்

ஆகவே நாராயணனை வழிபட்டாலே எல்லா தேவர்களையும் வழிபட்டதாகி விடுகிறது

## தேவர்களுக்கென்று தனி வழிபாடு அவசியமில்லை

ஆதி காலங்களில் இந்திரவழிபாடும் வருண வழிபாடும் தனியாக செய்யப்பட்டும் வந்தன

வருணனும் தேவர்களின் தலைவரான இந்திரனும் இரட்டையர்கள்

ஆகவேதான் மழைக்கு என்று வருண ஜெபமும் ;இந்திர வழிபாடும் நடத்தப்பட்டதை சிலப்பதிகாரத்தில் காணலாம்

இந்திர வழிபாடு ஸ்ரீகிறிஷ்ணரின் காலத்தில்தான் முதல் முதலில் நிறுத்தப்பட்டது

பாகவதத்தில் இந்நிகழ்வு சொல்லப்பட்டுள்ளது

நாராயணனே அவதாரமாக வந்தது கிறிஷ்ணாவாதாரம்

ஆனால் அந்த விபரம் இந்திரன் அறியவில்லை

ஆகவே கிறிஷ்ணரை சோதிக்க விரும்பி அவர் மாடு மேய்த்தபோது பெருமழை பெய்வித்தனர் இந்திரனும் வருணனும்

கிறிஸ்ணரோ அங்கிருந்த மலையையே பெயர்த்து ஒரு விரலில் குடை பிடித்தார்

அதில் ஒதுங்கி பசுக்களும் மாடுகளும் ஆயர்களும் கழித்தனர்

தங்கள் பலம் செயலற்றுபோன பிறகே கிறிஷ்ணரிடம் தாங்கள் யார் என வேண்டி அவர் நாராயணன் என அறிந்தனர்

அன்றுமுதல் இந்திரவிழா நிறுத்தப்படுவதாக கிறிஸ்ணர் அறிவித்தார்

தேவர்களின் தலைவரான இந்திரனுக்கோ ; படைப்பு தொழிலை செய்யும் பிரம்மனுக்கோ தனி கோவில் ; மரியாதைகள் வைணவத்தில் கிடையாது

ஏனென்றால் அதிதேவரான நாராயணனுக்குள் தேவர்கள் அனைவரும் அடக்கம்

பசுக்களை காத்ததால் மட்டுமே அல்ல ; இந்திரனுக்கும் வருணனுக்கும் வழிபாட்டை நிறுத்தியவர் கோவர்த்தன் என்பதை உணரவேண்டும்

கோ என்றால் பசு என்பது மட்டுமல்ல கோ என்றால் அரசனையும் குறிக்கும்

தேவர்களின் அதிபதி ; அதிதேவர் நாராயணன் ஒருவரே
தேவர்கள் மட்டுமல்ல ; அசுரர்களின் அதிபதி கருப்பசாமியும் அவரது அம்ஸமே

கருப்பசாமியை சைவர்கள் ; சக்தி வழிபாட்டுக்காரர்கள் கொண்டாடுவதால் அவரை சிவ அம்சம் என தவறாக கருதிக்கொள்கிறார்கள்

உண்மையில் கருப்பசாமி நாராயண அம்சம்

நல்ல அண்ணன் ; கெட்ட அண்ணன் என நாராயணிக்கு இரண்டு அண்ணன்மார்

சிவனை அங்கீகரித்த அண்ணன் திருமால்

என்றால் சிவனை அங்கீகரிக்காத அண்ணன் கருப்பசாமி

திருமணத்திற்கு முந்திய நிலையில் அண்ணையை காக்கிறவர் என்ற போர்வையில் கண்ணை திரட்டிக்கொண்டு கத்தியை தூக்கிக்கொண்டு நிற்பார் கருப்பசாமி

சிவனும் அன்னையும் இருக்கும் ஆலயத்தில் கருப்பசாமி இருக்கமாட்டார்

அன்னையும் கருப்பசாமியும் இருந்தால் அங்கு சிவன் இருக்கமாட்டார்

கண்ணிமார் கருப்பசாமி கோவிலாகத்தான் கிராம கோவில்கள் இருக்கும்

அது ஏதென்றால் தேவர்களும் அசுரர்களும் நாராயணனிலிருந்தே வந்துள்ளனர்

தேவர்கள் அசுரர்களை அடையாளம் காண வேண்டும் என்றால் நான் சொல்லும் எளிய

சூத்திரம் சிவனை அங்கீகரித்தால் தேவர்கள் ; எதிர்த்தால் அசுரர்கள்

ஆக்வேதான் நீதிமான்களும் ; பக்திமான்களும் ஆன வைணவர்கள் ; சன்மார்க்கிக்கள் ; இசுலாமியர் பலரும் சிவனை அங்கீகரிக்க தெரியாததால் இன்னும் அசுரர்கள் கணக்கிலேயே இருக்கிறீர்கள் என நான் சொல்வதுண்டு

இந்த ரெண்டும்கெட்டான் நபர்களுக்கு வேதம் தைத்ரியர்கள் என்ற பெயரே வைத்திருக்கிறது

பிரகலாதனை வேதம் தைத்ரியன் என்று சொல்லும்

சிவனை அங்கீகரிக்க தெரியாத பிரகலாதனை காக்க நரசிம்ஹ அவதாரம் வந்தது ; ஆனால் சாரபேஸ்வரராக சிவன் வந்து அவரை வாதித்தார் என்பார்கள்

ராமரையோ ; கிறிஷ்னரையோ ; இயேசுவையோ வாதிக்கும்படியாக சிவன் வரவில்லை

காரணம் அவர்கள் மனித குமாரர்களாக பூமியில் வந்தார்கள்

மனிதர்கள் அனைவரும் சிவனின் அம்ஸமானவர்கள்

தசரத குமாரன் ; நந்த குமாரன் என்றே அடையாளப்படுத்தப்பட்டனர்

இயேசுவை மற்றவர்கள் தேவகுமாரன் என்றால் அவர் பைபிள் முழுக்க தன்னைப்பற்றி சொல்லும்போது மனுஷகுமாரான் மனுஷகுமார்ன் என்றே சொல்லியிருப்பார்

அதாவது ஆதம் என்ற சிவனின் மகன் என்றே தன்னை அடையாளப்படுத்தினார்

சகல நாமங்களை காட்டிலும் ராமநாமமே சிறந்தது என சிவனாரே சொல்லக்காரணம் நாராயணன் மனிதனாக அவதரித்து வரும்போது அங்கே சிவ நாராயண கலப்பு

வந்துவிடுகிறது

மோஹினி அவதாரம் எடுத்த நாராயணனுக்கும் சிவனுக்கும் அய்யப்பன் பிறந்தார் என்ற கதையின் சாரம் இதுவே

நாராயணனும் சிவனும் இணைந்தால் அங்கு முழு வெற்றி ; அருவமான இறைவனின் அதாவ்து அல்லாஹ்றவின் முழுமை அங்கு வந்துவிடும்

குரானில் காப்ரியேல் என்ற நாராயணனும் ; மீகாயேல் என்ற சிவனும் எப்போதும் இரட்டையர்களாகவே செயல்படுவது குறிக்கப்பட்டுள்ளது

இந்துமதம் ஏன் இறைவனின் மதம் என நான் இசுலாமியர்க்கும் கிறிஸ்தவர்களுக்கும் சொல்லக்காரணம் அல்லாஹ்ற வின் அதிதேவர்களான காப்ரியேல் என்ற நாராயணனையும் ; மீகாயேல் என்ற சிவனையும் வழிபடும் மதம் என்பதாலேயே

சைவம் சிவனை மட்டுமே வழிபடுகிறது ;

வைணவம் நாராயணனை மட்டுமே வழிபடுகிறது ; இசுலாம் கிறிஸ்தவம் அல்லாஹ்வை மட்டுமே வழிபடுகிறது ; இவை அனைத்தும் எப்படி இறை மார்க்கமாகும் என்பதற்கு விளக்கம் குரானில் உள்ளது

2:285. இறை தூதர், தம் இறைவனிடமிருந்து தமக்கு அருளப்பெற்றதை நம்புகிறார்; அவ்வாறே மு஁ஃமின்களும் நம்புகின்றனர்; இவர்கள் யாவரும் அல்லாஹ்வையும், அவனுடைய மலக்குகளையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும் நம்புகிறார்கள்: “நாம் இறை தூதர்களில் எவர் ஒருவரையும் பிரித்து வேற்றுமை பாராட்டுவதில்லை

4:136. மு஁ஃமின்களே! நீங்கள் அல்லாஹ்வின் மீதும், அவனுடைய தூதர் மீதும், அவன் தூதர் மீது அவன் இறக்கிய இவ் வேதத்தின் மீதும், இதற்கு முன்னர் இறக்கிய வேதங்களின் மீதும் ஈமான் கொள்ளுங்கள்; எவர் அல்லாஹ்வையும், அவனுடைய

மலக்குகளையும், அவனுடைய வேதங்களையும், அவனுடைய தூதர்களையும், இறுதி நாளையும் நம்பாமல் நிராகரிக்கிறாரோ அவர் வழிகேட்டில் வெகு தூரம் சென்றுவிட்டார்.

முகமதுநபி மூலமாக வந்த குரானை மட்டுமல்ல ; அதற்கு முன்பு மலக்குகள் (தேவர்கள்) மூலமாக வந்த வேதங்களையும் நம்பவேண்டும் என்பதே குரானின் கட்டளை

இறைதூதர்கள் யாருமே வராத காட்டுமிராண்டிகளான அரபியர்களையும் ரட்சிக்கும்படியாக குரான் வந்ததால் ; அரபியர்களுக்கு மலக்குகள் - தேவர்கள் யார் என்றே தெரியாததால் அல்லாஹ்வைத்தவிர யாரையும் வழிபடாதே என தவறுதலாக புரிந்துகொண்டனர்

ஆனால் குரான் சொல்லுகிறது அல்லாஹ்வை மட்டுமல்ல அவரது மலக்குகளையும் வழிபடவேண்டும்

ஆனால் வழிபாடு இறைவனுக்கு மட்டும்தானே என இசுலாத் மட்டுமல்ல ;

சன்மார்க்கிக்கள் கூட சொல்கிறார்களே என்றால் :

இறைவனையும் தேவர்களையும் ஒருவரை ஒருவர் விட்டுவிடாமல் வழிபட வேண்டும் என்று வரப்போகிற சமரச வேதம் வழிகாட்டுகிறது

யாரையெல்லாம் நீங்கள் வழிபடவேண்டும் என்று விரும்புகிறீர்களோ அவர்கள் நாமத்தால் இறைவா - அல்லாஹ் - அருட்பெருஞ்சோதி என்று வழிபட்டால் அது முழுமையானது

எந்த வேதங்களுக்கும் விரோதமானதல்ல

காலம் கலிகாலம் ஆனதால் இந்த உண்மையை இதுகாறும் இறைவன் வெளிப்படுத்தாது நீங்கள் மண்டைகளை உடைத்துக்கொள்ள இறைவன் விட்டிருந்தார்

சத்திய யுகம் நெருங்கியதால் ;வரப்போகிற சமரச வேதத்தின் முன் அறிவிப்பாளன் என்ற முறையில் அடியேன் அறிவிக்கிறேன்

நாராயணன் நாமத்தாலும் சிவனின் நாமத்தாலும் அல்லாஹ் உங்கள் அறிவுக்கண்களை திறந்தருளட்டும்

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

**திருப்பாவை 5**

478 மாயனை மன்னு வட மதுரை
மைந்தனைத் தூய பெரு நீர்
யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும்
அணி விளக்கைத் தாயைக் குடல்
விளக்கம் செய்த தாமோதரனைத்
தூயோமாய் வந்து நாம் தூமலர்
தூவித் தொழுது வாயினால் பாடி
மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான்
நின்றனவும் தீயினில் தூசாகும்
செப்பேலோர் எம்பாவாய்.
5

பரலோகத்தில் - வைகுண்டத்தில் ஒரு நாள் என்பது பூமியில் ஒரு வருடம் !

தேவர்களும் ; ஒளி சரீரம் பெற்று மரணமில்லா பெரு வாழ்வு பெற்ற ஆத்மாக்களும் வாழும் அந்த லோகத்தில் மார்கழி மாதம் முழுவதும் வைகறை

பொழுது ! அதாவது அவர்கள் பிரார்த்தனை தியானம் செய்யும் நேரம் !

எனவே இம்மாதம் முழுவதும் புனிதமானது ! பக்தி ; தியானம் ; பிரார்த்தனைக்கு உரியது !

மாகாகுரு ஆண்டாள் - மனிதர்கள் பாடி துதிக்கவும் ; பின்பற்றவும் ; ஞானம் பெறவும் திருப்பாவை அருளினார் !!

அதில் சிறந்த முன் உதாரணம் உள்ளது !!

போய பிழையும் புகுதருவா நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோர் எம்பாவாய் !!

பாவமன்னிப்பு - சற்குருவாகிய நாராயணனது நாமம் - ராம நாமம் ; கிரிச்னரின் நாமம் ; இயேசுவின் நாமம் சகல பாவங்களையும் தீர்க்கும் !!

இந்தியாவில் திரேதா யுகத்திலும் ; துவாபர யுகத்திலும் வெளியரங்கமான இந்த உண்மை ; வெளிநாடுகளில் வாழும் மற்ற சமுதாயத்திற்கும் இயேசுவின் மூலமாக கலியுகத்தில் வெளிப்படுத்தப்பட்டது !!

வேதம் எதுவும் வெளிப்படுத்தப்படாத ஐரோப்பியர்களுக்கு இயேசுவின் நாமத்தால் - குமாரன் அதாவது ராமன் என்ற நாமத்தால் இந்த உண்மை கடந்து சென்றது

இந்தியாவில் ஸ்ரீ என்றால் இறைவனை குறிக்கும் ; அதுபோல இஸ்ரேலில் ஜெ என்றால் இறைவனை குறிக்கும்

ராம் என்றால் குமாரன் - பிரதிநிதி என்று அர்த்தம்

ஸ்ரீராம் என்பதும் ஜெரோம் என்பதும் ஒரே அர்த்தம் உள்ள சொல் .

இயேசு தன்னை குமாரன் - ராமன் ராமன் என்றுதானே சொல்லிக்கொண்டார்

ராமநாமம் சகல பாவங்களையும் தீர்க்கும்

காசியில் இறப்போரின் காதில் சிவ்னார் ராமா ராமா என்ற மந்திரத்தை ஓதுவாராம்

அதனால் அடுத்த பிறவியில் அந்த ஆத்மாக்கள் ஆன்மீக செறிவுள்ளவர்களாக பிறக்கிறார்களாம்

கலியுகத்தில் ஐரோப்பியர்கள் விஞ்ஞானத்தின் மூலமாக ஆதிக்க சக்தியாக மாறியதால் இந்தியாவில் ஏற்கனவே இருந்த உண்மையை அவர்கள்தான் முதலில் கண்டுபிடித்ததது போல சொல்லிவிட்டார்கள் !

ராமநாமம் சகல பாவங்களையும் தீர்த்து நாம் கடைத்தேற வழிகாட்டும்

விஷ்ணுசகஸ்ரநாமத்தில் பீஷ்மர் பாண்டவர்களுக்கு நாராயணனது ஆயிரம் நாமங்களையும் அவற்றின் மகிமைகளையும் பற்றி உபதேசிக்கிறார்

அதில் வந்து கலந்து கொண்ட சிவ்னார் சொல்கிறார் ; ஆயிரம் நாமங்களையும் விட ராமா ராமா என்ற நாமமே சிறந்தது என்கிறார்

ஶ்ரீராம ராம ரமேதி ரமே ராமே மனோரமே
சகஸ்ரநாம தத்யுல்யம் ராமநாம வராணனே

அதிதேவர் சிவன் திருவாய் மலர்ந்த வாக்கு இது - ஆயிரம் நாமங்களை சங்கல்பம் செய்வதை விட ராமநாமம் ஒன்றே சகல பாவங்களையும் தீர்க்க கூடியாது என்பதுவே இதன் சாரம் !!

இயேசுதான் முந்தய யுகங்களில் ராமராகவும் கிரிச்னராகவும் இந்தியாவில் அவதரித்தார் ; இந்து தர்மம் என்ற செழுமையான வேதம் நிர்மாணித்தார்

வேதமே வராத ஆப்ராகாமிய வாரீசுகளுக்கும் ஐரோப்பியர்களுக்கும் மட்டுமே யூதம் ; கிறிஸ்தவம் ; குரான் !

அவைகள் இந்து தர்மத்தில் வந்து அடங்க வேண்டியவை !

அதற்கான காலகட்டம் - சமரச வேதம் வெளியரங்கமாகும் நாள் நெருங்கிக்கொண்டுள்ளது !

நாரயணன் நாமத்தினாலே கடவுள் தங்களையும் தங்கள் குடும்பத்தாரையும் தமது அருளால் நிரப்ப வேண்டுகிறேன் !

நாராயணனாக வெளிப்பட்ட அந்த ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ நாராயணாய !!

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

## திருப்பாவை 6

479 புள்ளும் சிலம்பின காண்
புள்ளரையன் கோயிலில் வெள்ளை
விளி சங்கின் பேரரவம்
கேட்டிலையோ
பிள்ளாய் எழுந்திராய் பேய் முலை
நஞ்சுண்டு கள்ளச் சகடம்
கலக்கழியக் காலோச்சி
வெள்ளத்தரவில் துயிலமர்ந்த
வித்தினை உள்ளத்துக் கொண்டு
முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரி என்ற
பேரரவம் உள்ளம் புகுந்து
குளிர்ந்தேலோர் எம்பாவாய் 6

தமிழனாக பிறந்ததற்கு
பெருமைப்படவேண்டிய விசயங்கள் பல
இருந்தாலும் அவைகளில் மிகவும்
முக்கியமான ஒன்று கோதை அக்காவை
தமிழச்சியாக பெற்றதுமாகும்

அருள்நிலையில் ஆழ்ந்த சொற்சுவையும்
நயமும் பொங்கி வழிவதை
எத்தனைமுறையும் ரசிக்கலாம்

ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு
இயல்புள்ளோர்களை எழுப்புவதாக
திருப்பாவை உள்ளது . அந்த நபர்களுக்கு எந்த
விசயங்கள் ஆர்வத்தை கொடுக்குமோ
அத்தகைய விசயங்களையாக சொல்லி மிக
எளிதாக உயர்ந்த ரகசியத்தையும் சொல்லி
அவர்கள் உய்வடையும் வழியையும்
காட்டியிருப்பார்கள்

இந்தபாடல் பிஞ்சு மனம் கொண்ட
பிள்ளைகளுக்கானது .

குழந்தைகளுக்கு கால் கொலுசை
மாட்டிவிட்டு அது அங்கும் இங்கும்
ஓடும்போது ஜல் ஜல் என எழும்பும் ஒலியை
பெரியவர்கள் கேட்டு ரசிப்பார்கள் ; அத்தோடு
குழந்தை ஓரிடத்தில் இருக்காது .
துங்கிக்கொண்டிருக்கிறது என்று நினைத்தால்
அது எப்போது எழும்பும் எதைப்போய்

உருட்டும் என எதிர்பார்க்கவே முடியாது . அக்குழந்தை எங்கே சென்று கொண்டிருக்கிறது என்பதையும் வேலை செய்துகொண்டே தாயானவள் கண்காணித்துக்கொள்ளவும் முடியும்

கொலுசின் இசையில் அக்குழந்தையும் இயைந்து மேலும் மேலும் ஆர்வமாக ஓடி ஆடி நடக்க கற்றுக்கொள்ளும் .கொலுசின் இசை பிள்ளைகளுக்கு பிரியமான ஒன்று . அக்காவும் பொங்கி பொங்கி வழிந்து அவ்விடத்தை நிரப்பும் ஒலியை உடைய சிலம்பை அணிந்துள்ள பிள்ளையே என்கிறாள் . புள்ளும் சிலம்பு – புள்ளுதல் என்ற வார்த்தைக்கு எவ்வளவு அர்த்தம் கொள்வது . அது உற்பவித்து நிரப்புதல் மகிழ்ச்சியை வாரி வாரி வழங்குதல் என்பது வரை செல்கிறது . புள்ளும் சிலம்பினகால் புள்ளரையன் கோவில் என்று கோவிலை சுட்டுகிறார் .

தன் உந்திக்கமலத்தில் மகாலக்ஷிமியை உடையவராக வற்றாத செல்வத்தையும் அமரிக்கையான மகிழ்ச்சியையும்

கொடுப்பவரான புள்ளரையன் கோவிலைபார் ; அந்தக்கோவிலில் வெள்ளைவிழி யைப்போன்ற சங்கை நீ பார்த்திருப்பாயே . குழந்தைகளுக்கு தன் அன்புக்குறியோரின் கண்கள் மிகவும் பரிச்சியமானவையாக இருக்கும் . அதைப்போன்ற சங்கும் அதிலிருந்து எழும்பும் பேரரவமும் வாத்தியக்கருவிகளும் அங்கு பூஜை நடக்கிறது என்பதை உனக்கு உணர்த்தவில்லையா ?

ஈதென்ன இப்படி உறங்குகிறாய் ? பேய் முலை பாலை குடித்தவனின் கதையை சொல்லவா ?

அவன் குழந்தையாக இருக்கும்போது அவனை கொல்ல அரக்கி ஒருவளை ஏவினான் கம்சன் . அவள் அன்பே வடிவான தாயைப்போல வேடமிட்டு அந்தக்குழந்தையை அணுகி அதைக்கொஞ்சினால் ; பராமரித்தால் . குழந்தைக்கு சந்தர்ப்பம் பார்த்து தன் நஞ்சாகிய பாலை ஊட்டினாள் ; குழந்தையும் குடித்தது ; வல்லபம் செய்யும் அக்குழந்தை

சாகவில்லை ; ஆனால் அரக்கி செத்து விழுந்தாள் . அப்படியா ? அப்புறம் ... அப்புறம்

அப்புறம் ஒரு அரக்கனை அனுப்பினான் கம்சன் . அவன் பிள்ளைகள் ஏறி விளையாடும் சகடமாக – வண்டியாக உரு மாறி குழந்தைக்கு முன்பு வந்து வந்து நிற்கிறது . அதில் அந்தக்குழந்தை ஏறினால் வானத்தில் உயரப்பறந்து அங்கிருந்து வண்டியை கவிழ்த்து குழந்தையை கொன்று விடலாமல்லவா ?

அந்தக்குழந்தையும் அதில் ஏறியது . வண்டியும் வானத்தில் உயர பறந்தது . குழந்தையும் கைதட்டி ரசித்தது . வண்டியை குடை சாய்க்கலாம் என இப்படி புரட்டினால் அந்தக்குழந்தை காலால் எதிர்பக்கமாக மிதித்து சாய விடாமல் தடுக்கிறது . சரி அந்தப்புரம் சாய்த்தால் இந்தப்புரம் மிதித்து சமப்படுத்துகிறது . ஒரு மாபெரும் அரக்கன் ஒரு குழந்தையின் காலுக்கு எதிராக சக்தியை பிரயோகித்து பலமிழந்து சோர்ந்துபோய் பூமியில் வந்து விழுந்து

மூச்சிரைத்து செத்துப்போனான்

அரசர்கள் செங்கோலை வைத்து ஆட்சி செய்வதை கோலோச்சுதல் என்பார்கள் ; அதைப்போல காலால் அவன் கள்ளசகடத்தை கலக்கழிய காலோச்சினானாம் .

அவன் குழந்தையாக இருக்கும்போதே இவ்வளவு பராக்கிரமம் காட்டினானா ?

ஆம் . அவன் வெள்ளமாக பொங்கும் பாற்கடலில் ஆதிசேஷன் என்ற அதிதேவர் மீது அறிதுயில் கொள்ளும் பரமாத்மா . அவனே படைக்கப்பட்ட யாவற்றுக்கும் வித்து . வெளிப்படாத அருவமான கடவுளின் வெளிப்பட்ட யாவும் - ஜடஇயற்கையும் உயிரிணங்களும் அனைத்தும் அவனைக்கொண்டே கடவுளால் படைக்கப்பட்டது . ஆகவேதான் அவனை அறிதுயிலில் இருக்கிறவனாக - ஜடமாகவும் அதே நேரத்தில் இயங்குகிறவனாகவும் காட்ட பாற்கடலில் துயில்கிறவன் என்கிறார்கள் .

இன்றைக்கு உலகத்தால் பாராட்டப்படும்

ஞானிகளும் முனிவர்களும் யோகிகளும் எதனால் இந்த உன்னதமான நிலையை அடைந்தார்கள் தெரியுமா ?

நீயும் அவர்களைப்போல பெரும் சாதனை செய்யவேண்டுமா ?

எளிதான ரகசியம் . வழி அனைத்து படைப்புகளுக்கும் வித்தான அவனை உள்ளத்தில் உள்வாங்கி இருத்திகொள்வதுதான் . அவனை மட்டும் உள்ளத்தில் குடியேற்றி விட்டால்போதுமானது ; சகலமும் கைவரப்பெறும்

அதற்கு நீ என்ன செய்யவேண்டும் . முதலாவது கேள் . யார் எது சொன்னாலும் கேட்டு பழகு . கேள்விஞானம் என்றுதான் உள்ளது , புரிந்தாலும் புரியாவிட்டாலும் கேட்கிற காது – மனநிலையை வளர்த்துக்கொள்க .

அதற்குத்தான் சத்சங்கம் கூடும் கோவிலுக்கு போகவேண்டும் . நீ என்றோ கேட்டது உனக்குள்ளாக மெல்ல வளர்ந்து சந்தர்ப்பம்

சூழ்நிலை வாய்த்ததும் உனக்குள்ளாக இருந்து பிராகாசிக்கிற அறிவாக வெளிப்படும்

அதற்குத்தான் கோவிலுக்கு போகவேண்டும் . அங்கு பல பிறவிகளாக அந்தப்பரந்தாமனை உள்ளத்துக்கொண்ட ஆத்மாக்கள் பலர் வருவார்கள் . அவர்கள் அங்கு வந்து உள்ளம் குளிர ஹரி ஹரி என மெல்ல உச்சரிப்பார்கள் . அந்த ஒலி உள்ளம் புகுந்து உன் இதயத்தை நிரப்பினால் நீயும் மேன்மையடைவாய்

நாராயணனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ நாராயணனாய

ஆதிசேஷனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ ஆதிசேஷாய

நாராயணியாக வெளிப்பட்ட ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ நாராயணியாய

சிவனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே
நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ சிவாய

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

## திருப்பாவை 7

480 கீசு கீசு என்று எங்கும் ஆனைச்
சாத்தான் கலந்து பேசின பேச்சரவம்
கேட்டிலையோ பேய்ப் பெண்ணே
காசும் பிறப்பும் கலகலப்பக் கை
பேர்த்து வாச நறும் குழல்
ஆய்ச்சியர் மத்தினால்
ஓசை படுத்த தயிரரவம்
கேட்டிலையோ நாயகப் பெண்
பிள்ளாய் நாராயணன் மூர்த்தி
கேசவனைப் பாடவும் நீ கேட்டே
கிடத்தியோ தேசமுடையாய்
திறவேலோர் எம்பாவாய்
7

அந்திக்கருக்கலில் கீச்கீச் சென்று பறவைகள் இரைச்சலிட்டு அடங்கிவிடும் : தூங்கிவிடும்

ஆனால் அக்கா அதிகாலையில் பறவை பேசியதாக அதுவும் ஆனைச்சாத்தன் என்றொரு புதுப்பேரையும் சொல்கிறாளே

அக்கா ஆடுமாடுகள் மேய்த்தவர்களுடன் எப்போது அனுபவம் பெற்றாள் என தெரியவில்லை

மலையோரங்களில் வாழும் ஒரு பறவை செம்போத்து

அது அதிகாலையில் கீச் கீச் என அகவிக்கொண்டே பறந்து சஞ்சீவி மூலிகையை தேடி கொழுந்தை சாப்பிடும் என்பார்கள் ஆயர்கள்

இந்தப்பறவை அரிதானது ; அதன் கூட்டில் சஞ்சீவியின் குச்சிகள் இருக்கும் என்பது நம்பிக்கை

இதனுடைய குரல் வெகுதூரம் கேட்கும்

ஆகவேதான் ஆனைச்சாத்தன் என அக்கா சொல்கிறார்

வலிமையான சத்தத்தை கேட்டு கிடைக்கு காவல் உள்ளோர் முழித்துக்கொள்வர்

சாத்தன் என்றால் பாதுகாக்கிற

போர்த்தெய்வம்

செம்போத்து துஷ்ட மிருகங்களை மிரட்டி
எச்சரிக்கை செய்யும் இயல்புள்ளது

ஆயர்களுக்கு தோழன் போபோல

இந்தப்பாடல் முழுவதும் நாராயணனை
நம்புவோர்க்கு வசதி வாய்ப்புகள்
கூடுமென்கிறாள்

காசும் பணமும் கலகலக்கும் தொழில்
தயிரை கடைந்து வெண்ணெய் எடுத்தல்

செல்வசெழிப்பான குடும்பத்தில் செல்லமாக
வளர்க்கப்படும் வாலிபப்பெண்ணே

தயிர்கடையும் சத்தம் உன்னை
எழுப்பவில்லையோ

கேசி என்ற அரக்கனை கொன்ற கேசவனை
கோயிலில் புகழ்ந்துபாடும் சத்தம்
கேட்கலியோ

பொருளும் வேண்டும் அருளும் வேண்டும்

தயிரும் கடையனும் கேசவனையும்
வேண்டனும் என்கிறாள் கோதை அக்கா

## திருப்பாவை 8

481 கீழ் வானம் வெள்ளென்று எருமை
சிறு வீடு மேய்வான் பரந்தன காண்
மிக்குள்ள பிள்ளைகளும்
போவான் போகின்றாரைப்
போகாமல் காத்து உன்னைக்
கூவுவான் வந்து நின்றோம்
கோதுகலம் உடைய
பாவாய் எழுந்திராய் பாடிப் பறை
கொண்டு மாவாய் பிளந்தானை
மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்று நாம்
சேவித்தால் ஆவாவென்று
ஆராய்ந்து அருளேலோர் எம்பாயாய் 8

கீழ்வானம் வெள்ளென்று வெளுத்து விட்டது

மாடுகளும் கூட வீட்டை விட்டு வெளியேறி
புல்வெளிகளில் மேயத்தொடங்கி விட்டன

மார்கழி நீராடி கோவிலில் சென்று சேவிக்க வாலிப பிள்ளைகளும் புறப்பட்டு விட்டார்கள்

ஆனால் நான்தான் அவர்களை தடுத்து இங்கு அழைத்து வந்திருக்கிறேன்

ஆயர் பாடியில் செல்வச்செழிப்புள்ள தலையானவள் நீ

நாம் சென்று அவனை பாடி துதித்து சேவித்தால் ஆஹா ஓஹோ என பலர் புகழுமபடியாக வாழலாம்

ஏனென்றால் அவன் குதிரை முகம் கொண்ட வலிய அரக்கனின் வாயை பிளந்தவன் அல்லவா

கம்ஸணனின் அரசவை மல்லர்களான சாணூரன் மற்றும் முஷ்டிகன் ஆகியோரை மல்யுத்தத்தில் அடித்து வீழ்த்தியவன் அல்லவா

நம் செல்வம் மட்டும் போதுமானதல்ல ; நமக்கு ஆவி மண்டலத்தில் வருகிற சிக்கல்களை வீழ்த்தி பாதுகாக்கிறவனின்

தயவும் வேண்டுமல்லவா

நோய்க்கும் பாரு பேய்க்கும் பாரு என்ற பழமொழியை சாதாரண பொதுமக்கள் நல்வாழ்வுக்கு வழிகாட்டுகிறாள் கோதை அக்கா

ஆன்ம வாழ்வில் உயர்வதற்கு முயற்சிக்கத்தான் ஆன்மீகம் என்று இல்லை

சாதாரண பொதுமக்கள் தங்கள் அன்றாட வாழ்வில் சில பூஜை புனஸ்காரங்களை கடைபிடிப்பது அவர்களை பாதுகாக்கும்

வருடம் ஒரு முறை நோன்பு நோற்பது எல்லா மதங்களிலும் நடைமுறையில் உள்ளதுதானே

கிறிஸ்தவத்தில் லெந்து நோன்பு ;
இசுலாத்தில் ரம்ஜான் நோன்பு ;
வைணவத்தில் திருப்பாவை நோன்பு ;
சைவத்தில் திறுவெம்பாவை நோன்பு ;
அய்யப்பன் நோன்பு ; பழனி பாதயாத்திரை நோன்பு என கடமையாக்கி உள்ளார்கள்

சரியை அல்லது சாங்கிய வழிபாடு சாதாரண பொதுமக்கள் கடைபிடித்தல் உத்தமம் ; ஆன்ம வாழ்விலுள்ளோர் அவர்களை ஊக்குவிக்க நாமும் கடைபிடிக்க வேண்டும்

உள்ளேயே தேட வேண்டிய இறைவனை எதற்காக வெளியே தேட வேண்டும் என தத்துவம் பேசிக்கொண்டு இருக்கலாகாது

**திருப்பாவை 9**

482 தூமணி மாடத்து சுற்றும்
விளக்கெரியத் தூபம் கமழத்
துயிலணைமேல் கண் வளரும்
மாமான் மகளே மணிக் கதவம்
தாழ் திறவாய் மாமீர் அவளை
எழுப்பீரோ உன் மகள் தான்
ஊமையோ அன்றி செவிடோ
அனந்தலோ ஏமப் பெருந் துயில்
மந்திரப் பட்டாளோ
மாமாயன் மாதவன் வைகுந்தன்
என்றென்று நாமன் பலவும்
நவின்றேலோர் என்பாவாய்

9

கோதை அக்கா மிகுந்த விநயம் உள்ளவள் ; பாசமும் கண்டிப்பும் உள்ளவள்

மார்கழி மாதம் அவள் கோவிலுக்கு வரும் முன்பு ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவராக ஊரார் அனைவரையும் எழுப்புகிறாள்

அவர்களை அழைத்துக்கொண்டு கண்ணனின் வீட்டுக்கு வந்துவிட்டாள்

இப்போது குடும்பத்தாரில் யாரை முதலில் எழுப்புவது

மரியாதைக்குரிய மாமனை மாமியை கொழுந்தனை எழுப்பவில்லை

கண்ணனின் தங்கையான சுபத்ரையை எழுப்புகிறாள்

மற்றவர்களை எழுப்பும் பொது அவள் காட்டும் பணிவு இங்கு வரவில்லை

என்னதான் தேவர்கள் என்றாலும் மனிதனாக வரும்போது பூமிக்குரிய ஜபர்தஸ்து வந்துவிடும்

இவள் நாத்தனார் அல்லவா ?

அவளை பாராட்டி புகழ்ந்தாலும் கண்டிப்பும் கலந்தே வருகிறது

தூமணி மடத்தில் தூபம் கமள அழகிய

பஞ்சணை மேல் துயில் கொள்கிறாவளே என
பெருமை பாராட்டி அழைத்தாலும் அடுத்து
கண்டிப்பு வந்துவிடுகிறது

இவ்வளவு பாடுகிறேனே எந்திரிக்க வில்லை

நீயென்ன செவிடோ ; ஊமையோ
பெருந்தூக்கம் உன்னை அமுக்கி விடுமோ

என திட்டி விட்டு மாமியாரிடம் வத்தியும்
வைக்கிறாள்

மாமாயன் ; மாதவன் என நாம ஜெபம் செய்ய
வேண்டிய நேரத்தில் பொறுப்பில்லாதவளாக
தூங்குகிறாளே ?

வீட்டுக்குள்ளேயே வளர்ந்த பிள்ளை
ஆண்டாள்

அருள் நிலையில் பாடியபோது தமிழ்
வார்த்தை பிரயோகம் இருக்கிறதே அதை
திருப்பாவை முழுதும் ரசிக்கலாம்

இப்பாடலில் அனந்தலோ என்கிறாளே

அனந்தல் என்றால் என்ன

ஏதாவது யூகிக்க முடிகிறதா

அனந்தன் என்றால் ஆதி சேஷன்

பெண்பால் அனந்தல் என்கிறாள்

பகலெல்லாம் தூங்குகிற பாம்பை
போன்றவளே என திட்டுகிறாள்

**திருப்பாவை 10**

483 நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற
அம்மனாய்.மாற்றமும் தாராரோ
வாசல் திறவாதார்
நாற்றத் துழாய் முடி நாராயணன்
நம்மால் போற்றப் பறை தரும்
புண்ணியனால் பண்டு ஒரு நாள்
கூற்றத்தின் வாய் வீழ்ந்த கும்ப
கரணனும் தோற்றும் உனக்கே
பெருந்துயில் தான் தந்தானோ
ஆற்ற அனந்தல் உடையாய்
அருங்கலமே தேற்றமாய் வந்து
திறவேலோர் எம்பாவாய். 10

மைத்துனி என்பதை அம்மனாய் என்கிறாள் அக்கா

சுபத்ரை என்ற பெயரே சுவர்க்கம் புகுவதற்கு தகுதியானவள் என்கிறது

கிறிஸ்ணருக்கு தங்கையானவள் ;

பலராமனுக்கு உடன்பிறந்தவள்

ஆகவே அவள் வாழ்வே அவளுக்கு
நோன்புநோற்கும் தகுதியை
கொடுத்துவிடுகிறது

நரன் எனப்பட்ட சின்ன சிவன் அர்ச்சுணனுக்கு
வாக்கப்பட்டவள்

கலியுகத்தின் முதல் பேரரசன் பரிஸித்தின்
தாயானவள்

குந்தி மற்றும் காந்தாரிக்கு பிறகு
ராஜமாதாவாக அலங்கரிக்கப்பட்டவள்

ராஜமாதா சுபத்ரை என்பதைத்தான் நின்று
சுவர்க்கம் புகுகின்ற அம்மானாய் என கோதை
அக்கா விளிக்கிறாள்

நறுமணம் வீசும் துளசியை விரும்புகிற
நாராயணன் நம் நோன்புக்கு நன்மை தராமல்
போவானா ; நம்பிக்கையோடு
தாழ்திறப்பாயாக

முன்பு ராம்பாணத்துக்கு பலியான

கும்பகர்ணன் தூக்கத்தை உன்னிடம் கொடுத்துவிட்டானா

ஆற்றல் நிறைந்த போர்க்கப்பல் போன்ற பலராமனை (ஆதிசேஷனின் அம்சமானவரை ) அண்ணனாக அமைந்தவளே

எங்களுக்கு நம்பிக்கையூட்ட வந்து கதவை திறப்பாயாக

**திருப்பாவை 11**

484 கற்றுக் கறவைக் கணங்கள் பல
கறந்து செற்றார் திறலழியச் சென்று
செருச் செய்யும்
குற்றம் ஒன்றில்லாத
கோவலர்த்தம் பொற்கொடியே புற்று
அரவு அல்குல் புனமயிலே
போதராய்
சுற்றத்து தோழிமார் எல்லாரும்
வந்து நின் முற்றம் புகுந்து முகில்
வண்ணன் பேர் பாட
சிற்றாதே பேசாதே செல்வ
பெண்டாட்டி நீ எற்றுக்கு உறங்கும்
பொருளேலோர் எம்பாவாய் 11

சுபத்ரையை எழுப்புவதற்கே கோதை அக்கா பெரும்பாடு பட்டிருக்கிறாள்

9 ஆம் பாடலில் கண்டிப்பு காட்டியதால் தூக்கம் கலைந்து விட்டாலும் 10 ஆம்

பாடலில் நாலு வார்த்தை புகழ்ந்து எழும்பி உட்கார்ந்து விட்டாள்

ஆனாலும் படுக்கையை விட்டு இறங்கவில்லை

ஆகவே அவளை சரிக்கட்ட மேலும் புகழ்கிறாள் அக்கா

பசுக்களை திரட்சியாக கொண்டிருந்தாலும் அவைகளை திறமையாக பால் பீய்ச்ச வேண்டுமாம்

அதை திறமையாக கற்றவரும் ; தங்களை வீண் வம்புக்கு இழுப்பவரை அடக்கும் வல்லமையும் கொண்டவரும் வேறெந்த குற்றமும் இல்லாதவருமான ஆயர்பாடியின் அரசரான நந்தகோபருடைய பொற்கொடியே

நல்ல பாம்பின் படத்தை போன்ற அழகிய அக்குலை உடையவளும் அலங்கரிக்கப்பட்ட மயிலை போன்றவளுமே இணக்கம் அடைக

அண்டை அயல் தோழிமார்கள் உன் முற்றம் வந்து உன் அண்ணன் புகழ் பாடுகிறார்கள்

சின்ன சிவன் அர்ச்சுணனின் மனைவியாகும் தகுதி பெற்றவளே சிடுசிடுக்காமல் எழுந்து வா

**திருப்பாவை 12**

485 கனைத்து இளம் கற்றெருமை
கன்றுக்கு இரங்கி நினைத்து முலை
வழியே நின்று பால் சோர
நனைத்து இல்லம் சேறாக்கும் நற்
செல்வன் தங்காய் பனித் தலை வீழ
நின் வாசற் கடை பற்றிச்
சினத்தினால் தென் இலங்கைக்
கோமானைச் செற்ற மனத்துக்கு
இனியானைப் பாடவும் நீ வாய்
திறவாய்
இனித்தான் எழுந்திராய் ஈதென்ன
பேர் உறக்கம் அனைத்து
இல்லத்தாரும் அறிந்தேலோர்
எம்பாவாய்

12

கன்றுக்குட்டியை உடைய எருமை தன் கன்றை நினைத்து இரக்கம் கொள்கிறதாம்

கனைத்து அழைக்கிறதாம்

குட்டிக்கு பசிக்காத்தால் அது தாவி வரவில்லையாம்

ஆனாலும் தாய் நினைத்து பாலை சொரிகிறதாம்

அப்படி தானாய் சொரிந்த பாலால் வீடு சேறாகி விடுகிறதாம்

அவ்வளவு மிகுதியான பாலை திரட்சியாக உடையவன் என்றால் அவன் பெரிய செல்வந்தன் அல்லவா

செல்வச்சீமான் பலராமனின் தங்கையே

சுபத்ரையே

பனிபெய்து ஈரமான தலையோடு உன் வாசலில் நிற்கிறோம்

அனைத்து இல்லத்தாரும் உன் பேருறக்கத்தை பற்றி கோள் பேச இடம் கொடுக்கலாமா

தென் இலங்கையிலிருந்து புஸ்பக

விமானத்தில் ஆங்காங்கு வந்து இராவணன் செய்த அக்கிரமங்களை அடக்கி நம்மை காத்த மனத்துக்கு இனியவர்களை பாடவேண்டாமோ

கோதை அக்கா கோடாங்கி அடித்துத்தான் சுபத்ரையை எழுப்புகிறாள்

அது ஏதென்றால் இராவணனை அழித்தது இராமர் மட்டும் அல்லவே

அந்த லஷ்மணன்தானே அர்ச்சுனராக அவதரித்தார்

அவரின் காதல் மனைவியல்லவா சுபத்ரை

உன் மனத்துக்கு இனியானை பாடவும் வாய் திறவாய்

**திருப்பாவை 13**

486 புள்ளின் வாய் கீண்டானைப்
பொல்லா அரக்கனைக் கிள்ளிக்
களைந்தானைக் கீர்த்தி மை பாடிப்
போய்ப் பிள்ளைகள் எல்லாரும்
பாவைக் களம்புக்கார் வெள்ளி
எழுந்து வியாழம் உறங்கிற்று
புள்ளும் சிலம்பின காண் போதரிக்
கண்ணினாய் குள்ளக் குளிரக்
குடைந்து நீராடாதே
பள்ளிக் கிடத்தியோ. பாவாய். நீ
நன் நாளால் கள்ளம் தவிர்ந்து
கலந்தேலோர் எம்பாவாய்.

13

சுபத்ரையை எழுப்புவதற்கான முயற்சியில் கோதை அக்கா பாட பாட அவளுக்கு சுபத்ரை மீது அன்பும் பொங்கி வழிகிறது

ஆயிரம் இருந்தாலும் அவளது மைத்துனி அல்லவா ?

அவளை குழந்தையாகவே பாவித்து
அவளுக்கு ஆலோசனை
சொல்லத்தொடங்குகிறாள்

புள்ளின் வாய் கீண்டானைப் பொல்லா
அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்
போய்
பிள்ளைகள் எல்லாரும் பாவைக் களம்புக்கார்
வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று
புள்ளும் சிலம்பின காண் போதரிக்
கண்ணினாய்
குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே
பள்ளிக் கிடத்தியோ. பாவாய். நீ நன் நாளால்
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோர் எம்பாவாய்.

பறவை இனங்களுக்கும் உணவு அளிப்பவன்
பரந்தாமன் ; ஏனெனில் படைக்கப்பட்ட
அனைத்தும் அவனுக்குள்ளேயே
படைக்கப்பட்டது
அதே நேரத்தில் அவனுக்குள்ளேயே
படைக்கப்பட்டிருந்தாலும்
பொல்லாதவர்களாகிய அரக்கர்களின்

தலையை கிள்ளி எறிய அவன்
தயங்கியதில்லை

அப்படிப்பட்ட பரந்தாமனுக்கு முழு சரணாகதி அடைந்த பக்தர்கள் பரலோக ராஜ்ஜியத்தின் பிள்ளைகளாவார்கள் ; அவர்கள் பூமியில் இருந்தாலும் உலகத்தால் பகைக்கப்பட்டே இருப்பார்கள் ஆகவே அவர்கள் இடைவிடாது பரந்தாமன் மூலமாக இறைவனை வேண்டிக்கொண்டே வாழும் நிர்ப்பந்தத்தில் இருப்பார்கள்
ஆகவே அவர்கள் வாழ்வு எப்போதும் நோன்பு நோற்பதைப்போலவே இவ்வுலகில் இருக்கும் இடறலும் நோவும் வருவதும் அதை பிரார்த்தித்தே கடந்து செல்லுவதுமான பயிற்சியால் அவர்கள் எப்போதும் இறைவனின் புகழை துதித்தவர்களாகவே இருப்பார்கள்
இது பாவைக்கூத்து போல

ஒரு நாடகம் என்றாலே அதில் இடறல் தரும் வில்லனும் அவனை வெல்லும் ஒரு கதாநாயகனும் அவசியம்

அந்தப்போர்க்களத்தில் பிள்ளைகளின் பலம் எதுவென்றால் இறைவனையும் சற்குருவையும் புகழ் பாடிக்கொண்டிருப்பது மட்டுமே

வேதங்கள் அனைத்தும் பக்தர்களை மணவாட்டிகளாகவே சித்தரிக்கின்றன யாருக்கு மணவாட்டிகள் என்றால் வரப்போகிற சத்திய யுகத்தை ஆளப்போகிற யுகபுருஷன் கல்கிக்கு மணவாட்டிகள் அல்லது முருகனுக்கு மணவாட்டிகள் வள்ளிக்குறத்திகள் வள்ளிக்குறத்திகளுக்கு இறைபக்தி ஆபரணமாக இருக்கிறது ; ஆனால் ஒரு பெரிய குறை இருக்கிறது ; அது ஏதென்றால் சுய பெருமையில் விழுந்து விடுவார்கள்

அக்கா சொல்கிறார்கள் ; குள்ளக்குளிர குடைந்து உனக்குள்ளாக மூழ்கி சுய பெருமையில் வீழ்ந்து நீராடிக்கொண்டிராதே

ஒரு குறிப்பிட்ட காலம் வரை ஒரு பக்தன் அசுரர்களோடு போராட வேண்டும் ; அதில்

கொஞ்சம் வெற்றி பெற்றவுடன் அவனை மயக்கும் சுய பெருமையோடு போராடவேண்டும்

ஆன்மீக வாழ்வில் சமுதாயத்தில் அசுரர்கள் எவ்வளவோ இடரலோ அவ்வளவு இடரல் பூசாரிமார்களாலும் வருகிறது

அவர்கள் தங்கள் தொழிலின் நிமித்தம் இறைசக்திகளுக்கு குத்தகைதாரர்கள் போல தங்களை கருதிக்கொண்டு ஜீவர்களை முன்னேற விடாமல் தடுக்கிறவர்கள் ஆகி விடுகிறார்கள்

நல்ல ஒலிபெருக்கிகளாக இருப்பது பெரிய விசயமல்ல அது வெறும் மைக்செட் ஆனால் மைக்செட்கள் தங்களை ஞானவான்களாக கருதிக்கொள்ளும் ஆபத்து நேர்ந்துவிடுகிறது
இறைதூதர்கள் பூமிக்கு வரும்போதெல்லாம் அசுர ஆவிகளால் பீடிக்கப்பட்ட தீயவர்கள் கெடுதல் செய்ததை விட இறைவனுக்கு பூஜை செய்யும் தொழிலை செய்யும்

பூசாரிமார்கள் செய்யும் கெடுதல்
அதிகமாகவே இருந்திருக்கிறது

பூசாரிமார்களுக்கு யார் பலம் கொடுப்பது
என்றால் ஆவிமண்டலத்தில் பிரஹஸ்பதி
என்னும் குரு வியாழன் கிரகத்தின்
அதிதேவர்

கோதை அக்கா ஒரு முக்கியமான
ரகசியத்தை இங்கு சொல்கிறார் இதை
சொல்லும் தகுதி மற்ற
குருமார்களைக்காட்டிலும் கோதை
அக்காவிற்கு உண்டு
அது ஏதென்றால் குருமார்கள் பலர் இன்னும்
ஒளிசரீரம் பெற்று பரலோகம் போகாமல்
பூமியில் பிறந்துகொண்டே இருக்க கோதை
அக்கா ஒளிசரீரம் பெற்று பரலோகம்
போனவர் வள்ளலாரைப்போல

அவர் சொல்கிறார் எனக்குள்ளாக மூழ்கி நான்
பிரம்மம் என கண்டுகொண்டேன் நான்
புனிதன் பரிசுத்தன் ஞானி நானே கடவுள்
நான் குரு என்றெல்லாம்
பகட்டிக்கொண்டிராதே பாவை நோன்பு

நோற்ற கற்றுக்கொள்

நெய்யுன்ணாதே மையிட்டு எழுதாதே
மலரிட்டு முடியாதே
பெருமையை பகட்டாதே சரணாகதியை
தாழ்மையை கற்றுக்கொள்

ஆன்மீக பெருமை ஆன்மீக பகட்டுக்கு
பின்னணி வியாழன் பிரஹஸ்பதி
சாகாக்கலை மரணமில்லா பெருவாழ்வு
கற்றவர் யாரென்றால் சுக்ரன் வெள்ளி
கிரகத்தின் அதிபதி

ஆன்மீக பகட்டாகிய வியாழம் மறைந்து
வெள்ளி உதிக்கவேண்டும் பூசாரிகள்
மதவாதிகளை கடந்து சென்றால் ஒழிய
சாகாக்கலை கற்க முடியாது
இறைவனை தரிசிக்க முடியாது

சற்குரு இயேசு யூத குருமார்களை நோக்கி
குற்றம் சாட்டினார் :
மத்தேயு 23:15 மாயக்காரராகிய வேதபாரகரே!
பரிசேயரே! உங்களுக்கு ஐயோ, ஒருவனை

உங்கள் மார்க்கத்தானாக்கும்படி
சமுத்திரத்தையும் பூமியையும்
சுற்றித்திரிகிறீர்கள்; அவன் உங்கள்
மார்க்கத்தானானபோது அவனை உங்களிலும்
இரட்டிப்பாய் நரகத்தின் மகனாக்குகிறீர்கள்.

இறைவனுக்காக குருவே தவிர குருவுக்காக
இறைவன் கிடையாது
பலர் குருபக்தியும் இறைபக்தியும் ஒன்றென
பகட்டி குருவையே இறைவனாக ஆக்கி
இணைவைக்கும் பாவத்தில் விழுந்து
போகிறார்கள்

இந்த குற்றச்சாட்டு காலம் காலமாக
பூசாரிகளைப்பற்றியது குருகிரகத்தின்
ஆதிக்கத்தை கடர தெரிந்தால் ஒழிய
சாகாக்கலை சித்திக்காது
ராஜராஜேஸ்வரியாய் அதிதேவர் நாராயணி
யாரை அடக்கினார் மகிசாசுரனை அல்லவா
சுயமும் சுய பெருமையுமே ஆன்மீக
செருக்குமே அந்த மகிசாசுரன்

பலர் ஏன் குருவையே இறைவன் என
இட்டுக்கட்டுகிறார்கள் என்றால்

குருவைப்போன்ற மனிதனையே அவர்கள் மகிமைப்படுத்த விரும்புகிறார்கள் அதில் மனிதனான தனக்கும் ஒருநாள் மகிமை கிடைக்கும் என்ற ஆசை ஒழிந்துகிடக்கிறது

இறைவனைக்காட்டிலும் தன்னைப்போல ஒரு மனிதனையே மகிமைப்படுத்தும் கள்ளம் அவர்கள் உள்ளங்களில் ஒழிந்து கிடக்கிறது . ஆனால் இறைவனுக்காகாத்தான் குருவை மகிமைப்படுத்துகிறோம் என பூசி மெழுகிக்கொள்கிறார்கள்

கள்ளம் தவிர்த்து இறைவனை மகிமைப்படுத்து என்பதே கோதை அக்காவின் அறிவுரை

நாராயணன் நாமத்தினாலும் ஆதிசேஷனனின் நாமத்தினாலும் நாராயணியின் நாமத்தினாலும் சிவனின் நாமத்தினாலும் கடவுள் தங்களையும் தங்கள் குடும்பத்தாரையும் தமது அருளால் நிரப்ப வேண்டுகிறேன்

## திருப்பாவை 14

உங்கள் புழக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுனீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல்
வாய் கூம்பின காண் செங்கற் பொடி கூறை
வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான்
போதன்றார் எங்களை முன்னம்
எழுப்புவான் வாய்பேசும்
நங்காய் எழுந்திராய் நாணாதாய்
நாவுடையாய் சங்கோடு சக்கரம் ஏந்தும்
தடக்கையன்
பங்கயக் கண்ணானைப் பாடேலோர்
எம்பாவாய்.

அதிகாலையில் சமையல்காரர்கள் தங்கள் வேலையை ஆரம்பிக்கும் அளவு பெருங்கூட்டம் நந்தகோபருடைய அரண்மனை .

சமயல்கட்டிலிருந்து கழுநீர் வழிந்தோடி உனது அரண்மனையின் புழக்கடை குளத்தில் போய் கலக்கிறது

அந்த சத்தான நீரை குடித்து (டார்ச் தயாரிக்க வேண்டிய சூழ்நிலை இல்லாததால்) சூரிய ஒளி அவசியமில்லை என்ற நிலைமைக்கு ஆம்பல் செடிகள் போய் விடுகின்றன

அதனால் இலைகளை குவித்து அவைகள் ஓய்வுக்கு போய்விடுகின்றன என்கிறாள் கோதை அக்கா

அருளில் நிரம்பி பாடப்படுகிற பாடல்களில் தானாக உண்மைகள் - அறிவியல் வந்து குவியும்

செடி ; கொடி ; மரங்களுக்கு வாய் எதுவென்றால் அவைகளின் இலைகளே ஆகும்

அந்த இலைகளில் உள்ள பச்சயம் என்ற வேதிப்பொருள் சூரிய சக்தியை ஈர்த்து வேர்கள் மூலமாக உறிஞ்சிய தண்ணீர்

மற்றும் பூமியின் சத்துக்களை டார்ச் என்ற சாத்தாக மாற்றிக்கொள்கிறது

காற்றிலுள்ள கரியமில வாய்வுவை பிராண வாயுவாக மாற்றி வெளி விடுகிறது

மரங்கள் மேகங்களை ஈர்த்து மழை பெய்யவைக்கும் ; எனவே மரங்களை வெட்டாதீர்கள் ; மரங்களை நாடுங்கள் ; மரம் வளர்ப்போம் என்றெல்லாம் விளிப்புணர்வு உண்டாக்குகிறார்களே

மழை மட்டுமல்ல ; உயிரிணங்கள் சுவாசிக்க அவசியமான பிராண வாயுவை பூமியில் அதிகரிக்கிற வேலையையும் மரங்கள் ; செடி ; கொடிகள் செய்கின்றன

பிராணவாயுவை எப்போது வெளியிடும் என்றால் உணவு தாயாரிக்காமல் ஓய்வு எடுக்கும் நேரத்தில் பிராணவாயுவை வெளியிடும்

சுபத்ரையின் சமயல்கட்டிலிருந்து சத்தான நீர் வெளியேறுவதால் வாவியின் ஆம்பல்கள் ஓய்வுக்கு போய் பிராண வாய்வை வெளியேற்றி குடும்பத்தாருக்கு தெம்பை கொடுக்கின்றனவாம்

அதிகாலையில் வாக்கிங் போக சொல்லும் காரணம் பூமியில் பிராணவாய்வு அதிகமாக இருக்கும் என்பதால் ஆகும்

மார்கழி நீராடுதலுக்கும் இக்காரணம் உண்டு

விரதம் ; தூய்மையான பிராணவாய்வு ; இறை பேரருள் நிரம்பி மனிதர்கள் தெம்பாகி விடுவார்கள்

அதுமட்டுமல்ல செங்கல் பொடியை பஸ்பமாக்கி அக்காலத்தில் எல்லோரும் பல் துலக்க மாட்டார்கள் .

வசதி ; வாய்ப்பு நிரம்பியவர்களே

அப்படிபட்ட பொடிகளை பயன்படுத்தி பல்துலக்கி பளிச்சென்று வைத்திருப்பார்கள்

இந்த பாடல் ஏதென்றால் சுபத்ரை படுக்கையை விட்டு இறங்கி குளியல் அறைக்கு போய் விட்டாள் ; வெண்மையான பல்லை உடையவளாக இருக்க செங்கல் பொடி பஸ்பத்தை பயன்படுத்து என ஆலோசனை சொல்கிறாள்.

மைத்துனி ஆயிற்றே முத்துப்பல் அழகி என புகழ்கிறாள்

அடுத்து வாயழகை பற்றி பாட வந்து கொஞ்சம் உணச்சி வசப்பட்டு வாயாடி என கண்டித்து விட்டாள்

மார்கழி நீராட எங்களை எழுப்புகிறேன் ; கோவிலுக்கு போய் மங்களம் பாடுவோம் என வாய்கூசாது சொன்னீயே தாயி

உன்னைய உடுக்கடிச்சு அல்லவா

எழுப்பிக்கொண்டிருக்கிறேன்

சரி சரி விரைந்து வா

சங்கோடு சக்கரம் தாங்கும் தடக்கையன் ; தாமரைக்கண்ணன் உன் அண்ணனை பாடுவோம் வா

**திருப்பாவை 15**

எல்லே. இளம் கிளியே இன்னம்
உறங்குதியோ
சில் என்று அழையேன் மின் நங்கையீர்
போதருகின்றேன்
வல்லை உன் கட்டுரைகள் பண்டே உன்
வாய் அறிதும் வல்லீர்கள் நீங்களே நானே
தான் ஆயிடுக
ஒல்லை நீ போதாய் உனக்கென்ன
வேறுடையை எல்லாரும் போந்தாரோ
போந்தார் போந்து எண்ணிக்கொள்
வல் ஆனை கொன்றானை மாற்றாரை
மாற்றழிக்க வல்லானை மாயனைப்
பாடேலோர் எம்பாவாய்

ஆயிரம் இருந்தாலும் சுபத்ரை கோதை அக்காவின் மைத்துனி அல்லவா ; கதவுக்கு வெளியே இருந்துகொண்டே அவளை பாராட்டியும் கண்டித்தும் ஏலே வாலே என்று அவளோடு பேசிக்கொண்டேதான் இருக்கிறாள்

குளித்து தயாராகிவிட்டாள் சுபத்ரை ; ஆனால்

கொஞ்சம் லேட்டு அவ்வளவுதான்

பலர் போய் விட்டனர் ; ஆனாலும் நான் உனக்காகத்தான் காத்திருக்கிறேன் ; உன்னை சொட்டி பேச மாட்டேன்

உன் அண்ணனை சேவிக்க உனக்கும் எனக்கும் தானே முன்னுரிமை

வலிய அரக்கர்களை கொன்றவன் அல்லவா

அவனுக்கு மாறுபாடு உடையவர்களை அடக்கவும் வல்லவ்ன் அல்லவா

ஆனாலும் உனக்கும் எனக்கும் அவனிடத்து தயவு உண்டு என்கிறாள் கோதை அக்கா

## திருப்பாவை 16

நாயகனாய் நின்ற நந்தகோபன் உடைய
கோயில் காப்பானே. கொடி தோன்றும்
தோரண
வாயில் காப்பானே. மணிக் கதவம் தாள்
திறவாய் ஆயர் சிறுமியரோமுக்கு அறை
பறை
மாயன் மணி வண்ணன் நென்னலே வாய்
நேர்ந்தான் தூயோமாய் வந்தோம் துயில்
எழப் பாடுவான்
வாயால் முன்னம் முன்னம் மாற்றாதே
அம்மா. நீ நேய நிலைக் கதவம் நீக்கேலோர்
எம்பாவாய்

கோதை அக்கா ரெம்ப அட்வான்ஸ் திங்கிங்க்
உள்ளவள்

சுபத்ரை தயாராகி வரும்போதே வாயில்
காப்போனையும் எழுப்புகிறாள்

பெரிய பெரிய தலைவர்கள் மேடையில்
உட்கார்ந்திருக்கும் போதும் பேசும் போதும்

அவர்கள் பின்னால் AK 47 BK 47 உடன் நின்று சுற்றும் முற்றும் கண்ணாலேயே அளவெடுத்துக்கொண்டிருக்கும் பூனைப்படை யானைப்படையை பார்த்திருப்பீர்களே

அவர்தான் நாயகனாக நிற்கும் நபர்

மெய்க்காப்பாளர்கள் மிக மிக முக்கியத்துவம் உள்ளவர்கள் ; அவர்கள் அனுமதியில்லாமல் தலைவர்களால் ஒன்றும் செய்ய முடியாது

அக்கா விவரமானவள் என்பதால் நாயகனாய் நிற்கும் நந்தகோபருடைய வாயில் காப்போனே என புகழ்கிறாள்

விதவிதமாக கொடிகளையும் தோரணங்களையும் வைத்து அழகுபடுத்தியவன் நீயல்லவா

ஆயர் சிறுமியர்களான நாங்கள் உமது பாதுகாப்பில் அல்லவோ மகிழ்ச்சியாக உள்ளோம்

மணிக்கதவம் திறப்பாயாக

உன் எஜமாணி சுபத்ரை எங்களை அழைக்க வந்துகொண்டிருக்கிறாள் பார்த்தாயா

மாயன் மணிவண்ணனை நாங்கள் துயில் எழுப்புமபடியாக ; பாடும்படியாக எங்களுக்கு உள்ளுணர்வு கொடுத்துள்ளான் .

மார்கழி நோன்பு என்ற புது சம்பிரதாயத்தை நான் அவனது உத்தரவு இல்லாமல் ஆரம்பிக்கவில்லை

எப்ப பேசுன கேட்ட என்று ஏதாவது குறுக்கு மறுக்க பேசிராத தாயீ .

இந்தப்பாடலில் நென்னால் என்றொரு அழகிய வார்த்தையை அக்காஅறிவித்துள்ளார்கள்

நென்னால் என்பதற்கு உள்ளுணர்வு என்று அர்த்தம்

## திருப்பாவை 17

அம்பரமே தண்ணீரே சோறே அறம் செய்யும்
எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்
கொம்பனார்க்கு எல்லாம் கொழுந்தே குல
விளக்கே
எம்பெருமாட்டி யசோதாய் அறிவுறாய்
அம்பரம் ஊட அறுத்து ஓங்கி உளகு அளந்த
உம்பர் கோமானே உறங்காது எழுந்திராய்
செம் பொற் கழலடிச் செல்வா பலதேவா
உம்பியும் நீயும் உறங்கேலோர் எம்பாவாய்.

பூமிக்கு வானம் ஒரு பாதுகாப்பு வளையம்

பூமியில் வசிக்கும் பறக்கும் எல்லா
உயிரிணங்கள் மீதும் காற்றழுத்தத்தால்
நிலைத்து இயங்க செய்கிறது ;
பிராணவாயுவை தருகிறது

ஒசோன் படலம் என்ற அடுக்கால்
பிரபஞ்சத்திலிருந்து வரும் கதிர்வீச்சுகளை
தடுத்துக்கொள்கிறது

சூரிய வெப்பத்தை கூட வடிகட்டித்தான்

அனுப்புகிறது

பந்துபோல பூமியை சுற்றிய பாதுகாப்பு அடுக்காக வானம் இருப்பதால் அதை அம்பரம் என்கிறது தமிழ்

தமிழ் இலக்கியங்களில் அருளாளர்கள் அருளில் நிறைந்து பாடியவைகளில் பல விபரங்கள் விஞ்ஞானத்தை மெய்ப்பிப்பதாக இருக்கும்

ஆனால் மனித மூளையால் நிதானித்து பூமி தட்டை ; அது பாய் போன்றது என பைபிளில் வசனத்தை சேர்த்துவிட்டு இதுவும் இறைவார்த்தை என கிறிஸ்தவர்கள் நம்பித்திரிந்தார்கள்

பைபிளில் இறைவார்த்தையோடு மனித கலப்புகளும் உள்ளன என பரந்தமனதோடு அவர்கள் ஒத்துக்கொள்ளவேண்டும்

அப்படி இல்லாமல் பூமி உருண்டை என கண்டுபிடித்த விஞ்ஞாணி கலிலியோவின் கண்ணை கெடுத்தார்கள்

தங்களை அன்பின் மதம் என்றும் சொல்லிக்கொண்டார்கள்

மற்ற மதங்களெல்லாம் கடவுளிடத்திலிருந்து வராதவை என்று அவைகளை ஒழிப்பது கடவுளுக்கு செய்யும் தொண்டு என கிறிஸ்தவர்களும் இசுலாமியரும் நினைப்பதை விட்டுவிட்டால் பூமியில் குழப்பங்கள் வராது

கோதை அக்கா கதவை திறந்து அரண்மனைக்குள் வந்துவிட்டாள்

இப்போது மாமனை மாமியாரை கண்ணனை பலராமனை எழுப்புகிறாள்

அவள் உள்ளத்திலிருந்து வரும் மரியாதை ஒவ்வோரு மருமகளுக்கும் முன்னுதாரணம்

பெரியோர்களை மதிப்பது மருமகளின் கடமை

மாமனை பார்த்து சொல்கிறாள்

குடும்பத்தின் அம்பரமே ; தண்ணீரே ; சோறே ;

எம்பெருமானே ; அறம் செய்கிறவரே

இல்லறம் அல்லாது நல்லறம் இல்லை

என் மாமன் தர்மவான் ; நீதிதவறாதவன் ; அறம் செய்து குடும்பத்தையும் சமூகத்தையும் காக்கிறவன்

குடிப்பெருமை பெண்களுக்கு தகுதியானதே

ஆயர்கள் கொம்பு ஒன்று வைத்திருப்பார்கள்

கிடையை ஓட்டுவது ; கிளைகளை ஒடித்துவிடுவது ; எதிரிகளை தாக்குவது என பலனளிக்கும்

ஆகவே குலத்தை கொம்பனார் என்கிறாள்

ஆயர்குலத்திற்கே நீ குத்துவிளக்கு ; கொழுந்து என்கிறாள் மாமியாரைப்பார்த்து

மாமனை கூட எழுந்திரு என்பவள் மாமியிடம் ஞாபகப்படுத்துகிறேன் என பவ்வியம் காட்டுகிறாள்

அதே அம்பரத்தை தனது ஒரே காலால் ஊடறுத்தவனே

மேய்ப்பர்களின் தலைவனே

மேய்தல் என்றால் விலங்குகள் உணவு எடுப்பது

ஆகவே அவர்கள் மேய்ப்பர்

அழகுதமிழால் உம்பர் ; ஊட்டுகிறவன் என்கிறாள்

கிறிஸ்ணா படியளக்கும் நேரம் வந்துவிட்டது ; எழுந்திரு

அடுத்து பலராமன் ;அண்ணி என்கிற உரிமையோடு கொஞ்சவும் செய்கிறாள்

செம்பு போன்ற பாதங்களை உடைய செல்லமே பலதேவா

படியளக்கிறவனோடு நீயும் உறங்காதே ; அவனையும் எழுப்பிவிடு

குடும்ப அக்கறை ;பாராம்பர்யம் ;பெருமை
எதையும் கோதை அக்கா
விட்டுக்கொடுக்கவில்லை

குடும்ப குத்துவிளக்கு அவள்

## திருப்பாவை 18

உந்து மத களிற்றன் ஓடாத தோள் வலியன்
நந்தகோபன் மருமகளே நப்பின்னாய்
கந்தம் கமழும் குழலி கடை திறவாய்
வந்து எங்கும் கோழி அழைத்தன காண்
மாதவிப்
பந்தல் மேல் பல் கால் குயிலினங்கள்
கூவின காண்
வந்தார் விரலி உன் மைத்துனன் பேர் பாடச்
செந்தாமரைக் கையால் சீரார் வளை ஒலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேலோர் எம்பாவாய்.

எதிரிகளை கண்டு ஓடாமல்
மதயானை போல துரத்துகிற வலிமையான
தோளை உடைய நந்தகோபாலன் மருமகளே
நப்பின்னாய்

கோதை அக்காவிடம் வார்த்தை விநயங்களை
கற்றுக்கொள்ள வேண்டும்

கூட்டத்தோடு கூட்டமாக கிறிஸ்ணனின்
முதல் மனைவியை எழுப்பலாம் அல்லவா

நக்கவிநயம் பிடிச்சுட்டாள்னா

ஆகவே தனி ஆவர்த்தனமாக கட்டம் கட்டி கவணமாக எழுப்புகிறாள்

முதலில் சுபத்ரையை கைக்குள் போட்டுக்கொள்ள ஐந்தாறு பாட்டு பாடினாள்

அவ விட்டுக்கொடுக்க மாட்டாள் அல்லவா

அதே போல நப்பின்னையை புகழ்கிறாள்

கந்தம் தூபத்தால் நறுமணம் கமழும் குழல்களை உடையவளே

கோழி விடாமல் கூவுகிறதே கேட்டாயோ

உன் வீட்டில் நீ அமைத்துள்ள மாதவிப்பந்தலில் பல வகையான விசேஸ மலர்கொடிகளில் வாசம் செய்யும் குயிலிணங்கள் கூவி இன்னிசை பரவுகிறதே

கந்தரலங்காரத்தில் இதழி என்றொரு வார்த்தை வரும் அது ஏதென்றால் நாக்கை மையமாக வைத்து வாழும் பாம்பை

குறிக்கும்

அதுபோல எதுகை மோனையாக விரலி என்ற வார்த்தையை பெண்களை குறிக்க பயன்படுத்துகிறாள் அக்கா ; அக்காலத்தில் பெண்கள் வீட்டுவேலை மட்டுமே செய்வார்கள் ; அவர்களுக்கு விரல் தானே மூலதனம் ; ஆகவே விரலி

சொற்சுவை என்பது இதுதான்

வந்தார் விரலி உன் மைத்துனன் பேர்பாட

உன் வீட்டுக்காரரைபுகழ்ந்துபாடி பரிசில்கள் பெற பெண்கள் வந்திருக்கிறார்கள்

செந்தாமரை போன்ற உன் கைகளில் வளையல்கள் சிறப்பாக ஒலிக்க வந்து உள் வாசலை திறந்து அவனை தரிசிக்க விடு

நான் முதலில் வேண்டாம் என்று நினைத்தேன் ; இப்பாடலில் விரலி என்றால் பெண்கள் என்றொரு வார்த்தையை சொன்ன அக்கா இன்னொரு தமிழ் முத்தையும் மரியாதை செய்கிறாள்

அது மாதவி என்ற நவரத்தினம் . அவள் குடிப்பிறப்பு கணிகையர் குலமாக இருக்கலாம்

ஆனால் சேற்றிலே முளைந்த செந்தாமரை

பேரழகி மட்டுமல்ல மாபெரும் தபஸ்வீணி அவள்

கர்மாவை கழிக்க மாதவியாக வந்து பிறந்தாலும் ;கோவலன் ஒருவனுக்கே தன்னை அர்ப்பணித்து வாழ்ந்தவள்

அக்காலத்தில் பலதார மணம் உண்டு

தன்னை மணந்து அந்தஸ்தோடு வாழ வை என சொல்லக்கூட தெரியாமல் ;தன் தாயாரின் வியாபார உத்திக்கு பலியாகி கோவலனின் பொருளாதார வாழ்வு சீர்கெட காரணமானாள்.

ஆனால் கோவலனுக்கு பின்பு உலகை வெறுத்து மனதார சமண துறவி ஆகி மாபெரும் நோன்பு நோற்றவள்

மா தபஸ்வி என்பதே மாதவி ஆகும்

பெயருக்கு ஏற்ப மா தபஸ்வீயாக வாழ்ந்து அட்சய பாத்திரம் அடையப்பெற்ற மணிமேகலையின் தாய் என்ற ஸ்தானம் பெற்றவள்

அட்சயபாத்திரம் வரமாக அடையப்பெறுவது சாதாரண விசயமா

தமிழின் அடையாளங்களுள் மணிமேகலையும் அவள் தாய் மாதவியும் ஒன்று

மாதவியை இங்கு மகிமைப்படுத்தியுள்ளாள் கோதை அக்கா

## திருப்பாவை 19

குத்து விளக்கெரிய கோட்டுக் கால் கட்டில் மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேல் ஏறிக்
கொத்தலர் பூங்குழல் நப்பினை கொங்கை
மேல் வைத்துக் கிடந்த மலர் மார்பா வாய் திறவாய்
மைத் தடம் கண்ணினாய் நீ உன்
மணாளனை எத்தனை போதும் துயிலெழ ஒட்டாய் காண்
எத்தனையேலும் பிரிவு ஆற்றகில்லாயால்
தத்துவம் அன்று தகவேலோர் எம்பாவாய்

கோதை அக்காவின் அணுகுமுறை திறமையானது

மூத்தவள் நப்பின்னையை அழைத்து பேசிக்கொண்டிருந்தவள் ; அவளோடு தொடர்பு படுத்தி கிறிஷ்ணனையும் எழுப்புகிறாள் ; அப்படியே நப்பின்னையையும் அவனை எழுப்பிவிடு என்பதை வஞ்ச புகழ்ச்சி

அணியில் பேசுகிறாள்

கோட்டுக்கால் மெத்தை என்பதிலேயே மரச்சட்டங்களால் செய்யப்பட்ட கட்டில் ; அதுவும் பூச்சி அரிக்காத தோதகத்தி மரத்தால் ஆன கட்டில் அதில் இலவம்பஞ்சால் உருவாக்கப்பட்ட மெத்தை என்பதை அடையாளப்படுத்தி விட்டாள்

அதில் பூங்கொத்து போன்ற பூங்குழலால் நப்பின்னையுடன் தூங்குகின்றவனே

நப்பின்னை எழுந்து உன் பள்ளியறையின் கதவை திறக்க சிபாரிசு செய்வாயாக

மையால் எழுதப்பட்ட அழகிய கண்ணை உடையவளே

கிறிஷ்ணன் தூக்கத்தில் இருந்து எழுவதற்கு உன் மனம் இடம் கொடுப்பதில்லை ; அவனை ஒரு நிமிடம் கூட பிரிவதற்கு நீ தயாரில்லை

ஆனாலும் சகலத்தையும் நிர்வாகிக்கும் ; காத்தல் ; படியளத்தல் என்ற தொழிலை செய்ய வேண்டிய அதிதேவர் அவரல்லவா

கணவன் தொழிலில் சிறந்தவனாக இருக்க மனைவி இடையூறாக இருக்க கூடாதல்லவா

அது தர்மம் ஆகாதே ; பொறுத்துக்கொள் என்கிறாள்

தத்துவம் அன்று தகவடைக

இதற்கு மேல் எந்தப்பெண்ணாவது கணவனை தொட்டுக்கொண்டு படுக்கையில் இருப்பாளா

எந்திருச்சி வந்து பள்ளியறை கதவை திறந்து கிறிஷ்ணனை தரிசித்துக்கொள்ளுங்கள் என அனுமதித்து விட்டாள்

**திருப்பாவை 20**

முப்பத்து மூவர் அமரர்க்கு முன் சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே துயில் எழாய்
செப்பம் உடையாய் திறல் உடையாய்
செற்றார்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா துயில் எழாய்
செப்பென்ன மென் முலைச் செவ்வாய்ச்
சிறு மருங்குல்
நப்பின்னை நங்காய் திருவே துயில் எழாய்
உக்கமும் தட்டொளியும் தந்து உன்
மணாளனை
இப்போதே எம்மை நீராட்டேலோர் எம்பாவாய்

முப்பத்து முக்கோடி தேவர்களைஅசுரர்கள்
தங்கள் மாயைகளால் மயக்கி
அடிமைப்படித்தி விட்டார்களாம்
ஒரு குறிப்பிட்ட காலம் வரை இறை நேசம்
கொள்வோருக்கும்
எதற்கெடுத்தாலும் சோதனைகளும்
தடைகளும்
முட்டுக்கட்டைகளும் வந்து குவியும்

பட்டறிவில்லாத உபதேசங்கள் பெரிய பலன்
கொடுக்காது

உழைக்களத்தில் இரும்பு மேருகேற்றப்படுவது போல வாழ்வில் அன்றாட சனத்தில் அசுர மாயைகளோடும் தடைகளோடும் போராடி போராடி உரமும் பொறுமையும் நம்பிக்கையும் அடையாத ஆத்மா ஞானமடையாது

முழு சரணாகதியை கற்றுக்கொள்ளாது

அல்லாமலும் முற்பிறவிகளில் நாமும் செய்த அழிச்சாட்டியங்களுக்கு பதிலும் அனுபவித்தாகவேண்டும்

ஆகவே அசுரர்கள் தேவர்களை அடக்குவது ஒரு குறிப்பட்ட காலம் வரை தொடரவே செய்யும்

ஆனாலும் அடிமைகளாக அல்லாடும் தேவர்களை விடுவிக்க என்றே ஒரு அம்சம் இருக்கிறது

அவர் முருகன் தேவ சேனாதிபதி

பரமண்டலத்தில் ஆதியில் தேவர்களை ஆட்டிப்படைத்த அசுரர்களை அடக்கி

விடுதலை கொடுத்தவர் முருகன்

ஆனால் கோதை நாச்சியாரோ
தேவர்களுக்கு முன் சென்று
கப்பம் தவிர்ப்பவர் நாராயணன் என்கிறார்

முருகன் பரலோகத்தில் நாராயணனே என
ஆதி தமிழ் வேதங்கள் பல இடங்களில்
சொல்கின்றன . ஆனால் அவன் பூமிக்கு
அவதாரமாக வந்தாலோ ஆதி மனிதனான
சிவனின் பிள்ளை

ஹரிஹரன்

ஹரி = நாராயணன் + ஹரன் = சிவன்

நாராயணன் மனிதனாக அவதாரமெடுத்து
வந்தால் அவன் ஹரிஹரன் ; முருகன்

அவதாரங்கள் அனைவரும் ஹரிஹரர்களே

ஹரிகரா ஹரிகரா ஹரிகரா என கோசம்
போட்டதே காலப்போக்கில் அரோகரா
அரோகரா என மாறிவிட்டது

சரி விசயத்துக்கு வருவோம்

கோதை அக்கா தமிழச்சி ஆயிற்றே ; அவளின் நேர்த்தியான அணுகுமுறை இப்பாடலிலும் வெளிப்படுகிறது

இந்த பாடலில் அவள் நாராயணனையும் அவளின் மனைவியையும் துயில் எழுப்புகிறாள்

ரெண்டு போரையும் சேர்த்தே அழைக்கிறாள்

ஒருவன் மாணாளன் இன்னொருத்தியோ சக்களத்தி ; மதிக்க மாட்டாளே

சக்களத்திக்கு என்னைய அடிமையாக்கதடா சாமி என்பதை பக்குவமாக சொல்கிறாள் ; முப்பத்து மூன்று கோடி தேவர்களை அடிமைத்தளையிலிருந்து விடுவித்தவனல்லவா நீ என்கிறாள்

செம்மையானவனே திறமையானவனே

உன்னோடு ஒத்துப்போகிறவ்ர்களுக்கு ஞான அக்கினியால் இருளை களைகிறவன் நீ

அப்புறம் சக்களத்திக்கே ஐஸ் ஐஸ்

நப்பினையின் அழகை வர்ணித்து ஐஸ் வைத்து உன் மணவாளனுக்கு ஊக்கமும் ஆக்கமும் கொடுத்து என்னை அருளால் அபிஷேகிக்கும் படியாக செய்வாயாக என்கிறாள்

அழகான நப்பினையின் மணவாளனே என்கிறாள்

தாயீ கோபப்பட்டிராத அவரு ஓம் புருஷன்தா உன் தயவு எனக்கு என்னைக்கும் வேணும் தாயீ

கில்லாடி அக்கா
அணுகுமுறையில்கில்லாடியே

நாராயணன் நாமத்தினாலும் ஆதிசேஷனனின் நாமத்தினாலும்
ஆதிசக்தியின் நாமத்தினாலும் சிவனின் நாமத்தினாலும் கடவுள் தங்களையும் தங்கள் குடும்பத்தாரையும் தமது அருளால் நிரப்ப

வேண்டுகிறேன்

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

## திருப்பாவை 21

ஏற்ற கலங்கள் எதிர் பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே அறிவுறாய்
ஊற்றம் உடையாய் பெரியாய் உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே துயில் எழாய்
மாற்றார் உனக்கு வலி தொலைந்து உன் வாசற் கண்
ஆற்றாது வந்து உன் அடி பணியுமா போலே
போற்றியாம் வந்தோம் புகழ்ந்தேலோர் எம்பாவாய்

பால் பீய்ச்சும் போது பால் பொங்கி வழியும் படியாக மறுக்காமல் பாலை சொறிகிற வள்ளல் பெரும் பசுக்களை தனது கிடையில் அளவில்லாமல் சேர்த்து வைத்து காத்து விரித்தியாக்கும் ஆற்றல் அறிவு உள்ள நந்தகோபனின் மகனே

உனக்கு சமர்ப்பிக்கும் எங்கள் வாசகத்தை கேட்பாயாக

சகலவற்றிக்கும் படியளக்கிறவன் -
ஊட்டுவிக்கிறவன் நீ

நன்மை தீமைகளுக்கு அதிபதியும் நீயே

சகலமும் உன்னைக்கொண்டே உன்
மூலமாகவே இறைவனால்
உற்பவிக்கப்படுகின்றன

**யோவான் 1:3** சகலமும் அவர் மூலமாய்
உண்டாயிற்று; உண்டானதொன்றும்
அவராலேயல்லாமல் உண்டாகவில்லை.

அருவமான இறைவன் என்ற
வெட்டவெளிக்குள் துலங்கும் பருப்பொருள் ;
வானம் ; வெளி உள்ளடக்கிய பிரபஞ்சம்
அனைத்தும் நீயே - பரமாத்மா எனப்படுகிறாய்

தோன்றிய பொருட்கள் அனைத்தும்
பால்வெளி மண்டலத்தில் அல்லவோ இயங்கி
வருகிறது

உன்னையே அருட்பெருஞ்ஜோதி என்று வள்ளலார் உள்ளிட்ட ஞானிகள் வர்ணிக்கிறார்கள்

தோற்றமாய் நின்ற சுடரே

கீதை 11 : 3 சகலவற்றின் அதிபதியே ! ( பரமேஸ்வரா ) கடவுளின் உன்னதமான வெளிப்பாடே ! ( நாராயணனே ) சகல உருவங்களின் மொத்த சொருபமான புருஸோத்தமரே ! இப்போது உங்களது மனித சொரூபத்தை காண்பதுபோல தங்களது பரமாத்ம சொரூபத்தையும் காண ஆசைப்படுகிறேன் !

கீதை 11 : 4 யோகங்களால் விளையும் அமானுஸ்ய சக்திகளின் அதிபதியே ! ( யோகேஸ்வரா ) என்னால் தாங்கிக்கொள்ளுமளவு எனது சக்திக்குட்பட்ட அளவு உமது பரமாத்ம சொரூபத்தை காட்டும் படி இறைஞ்சுகிறேன் !

கீதை 11 : 5 கடவுளின் உன்னதமான வெளிப்பாடாகிய கிரிஸ்ணர் கூறினார் !

பார்த்தா ! நூற்றுக்கணக்காகவும் ஆயிரக்கணக்காகவும் பற்பலவிதமாகவும் பலரூபமாகவும் பலவர்ணமாகவும் உள்ள பரமாத்ம தெய்வீக சொரூபத்தை உன்னால் முடிந்தளவு பார் !!

கீதை 11 : 6 பரத குலத்தோன்றலே ! பற்பல வெளிப்பாடுகளான ஆதித்யர்கள் , வசுக்கள் , ருத்ரர்கள் , அஸ்விணிகள் ,மருத்துகள் மற்றும் பல தேவதூதர்கள் இன்னும் யாரும் பார்த்திராத அதிசயமான விவரங்களை இப்போது பார் !

கீதை 11 : 7 அர்ச்சுணா ! இப்போது இந்த உடலில் அண்டசராசரங்கள் அனைத்தையும் நீ பார்க்கலாம் ! இயங்குவன இயங்காதவன இதுவரை நீ பார்க்க விரும்பியவைகள் இனிமேலும் நீ பார்க்க விரும்புபவைகள் அனைத்தையும் அந்த பரமாத்ம சொரூபத்தில் உன்னால் காணமுடியும் !

கீதை 11 : 8 ஆனால் அதை உனது ஊணகண்ணால் காணமுடியாது ! ஆகவே தெய்வீக பார்வையை உனக்கு அருளுகிறேன்

! இப்போது எனது மஹிமையை தரிசிப்பாயாக !

தர்மம் மட்டுமல்ல ; அதர்மமும் உனக்குள்ளேயே தானே முகிழ்த்துள்ளன

தேவர்கள் மட்டுமல்ல ; அசுரர்களும் உன்னிடமிருந்தே உற்பவித்துள்ளனர்

ஆகவே சகல பாவங்களுக்கும் நீயும் பொறுப்பேற்று வலியை ஒவ்வொரு அவதாரத்திலும் (ராமர் , கிறிஷ்ணர் & இயேசு) சுமந்தும் வருகிறாய்

மாற்றார்களால் - அசுரர்களால் உனக்கு உண்டாகும் வலி எப்போது நீங்கும் என்றால் அவர்கள் தங்களை உணர்ந்து தீமைகளிலிருந்து விடுபட்டு தப்ப உன் வாசலில் சரண்டையும் நாளில் அன்றோ

கீதை 11 : 21 வானமண்டல சேனைகளான தேவதூதர்களின் திரள்கூட்டமும் உம்மிடம் சரணடைகின்றன ! அவைகளில் சிலவோ (

அசுரர்கள் ) சுயமகிமை தேடியதற்காக
அச்சமடைந்தனவாக கைகளை கூப்பி
தொழுது உம்மிடம் மன்றாடி தொழுகின்றன !
உம்மைத்துதித்து உம்மிலே
ஐக்கியமடைகின்றன !

அதுபோலவே உம்மை போற்றி புகழ்ந்து
பாடுகிறோம் எங்களை ரட்சித்து
அருள்வாயாக

## திருப்பாவை 22

அம் கண் மா ஞாலத்து அரசர் அபிமான
பங்கமாய் வந்து நின் பள்ளிக் கட்டிற் கீழே
சங்கம் இருப்பார் போல் வந்து
தலைப்பெய்தோம்
கிங்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்
போலே
செங்கண் சிறுச் சிறிதே எம்மேல் விழியாவோ
திங்களும் ஆதித்தனும் எழுந்தாற் போல்
அம் கண் இரண்டும் கொண்டு எங்கள் மேல்
நோக்குதியேல்
எங்கள் மேல் சாபம் இழிந்தேலோர்
எம்பாவாய்

தமிழச்சி கோதை அக்காவின்
உள்ளத்திலிருந்து பொங்கி வந்த
திருப்பாவையை கேட்டுக்கொண்டிருந்தாலே
போதும் ; தமிழ் புலமை தானே வந்துவிடும்

இவ்வளவு எளிமையாக எவ்வளவு
அற்புதமான கருத்துகளை

அள்ளிதெளித்துள்ளார்கள் . அதனால் மெய்மறப்பதொடு சரி எழுதலாம் என்றே தோன்றுவதில்லை .

திருப்பாவை முழுதும் ஒவ்வொரு பாடலாக ஒவ்வொருவரை துயிலெழுப்பும் அக்கா ; இப்போது தனது இதயம் ஆக்கிரமித்த காதலனிடம் வந்து விட்டாள் .

எந்த அக்கறையும் இல்லாமல் அவனோ துயின்று கொண்டிருக்கிறான்

பொதுவாக நான் காதலை ஆதரிப்பதில்லை . அதில் வரும் இம்சைகள் இருக்கிறதே கொஞ்ச நஞ்சமல்ல . பல ரூபத்தில் வித விதமாக நம்மை அடித்து அலைக்களிக்கும் . இந்த இம்சைகள் ; கற்பனைகள் எல்லாமே நமக்குள்ளே இருக்கும் மாயைகளாக இருக்கும் ; அது நம் எதிராளி அப்படிப்பட்ட நபர் என்பதாக நம்மை நம்ப வைக்கும் . ஆனால் முடிவில் அது அனைத்தும் பொய் ; நாமாக கற்பனை செய்து கொண்டதில் கால் பங்கு

கூட அந்த நபரிடம் தகுதியோ ; அன்போ ; அக்கறையோ இல்லை ; ஏமாந்துவிட்டோம் என்பதாகவே முடியும் . 99 % காதல்கள் ஏமாறுவதாகத்தான் இருக்கிறது

பெண்கள் அவ்வளவு ஈசியாக யாரையும் காதலிப்பதில்லை . எப்படியோ எந்தெந்த சுழ்நிலையில் விழுந்து விட்டால் ; தான் எதோ ரெம்ப திறமையாக ஆராய்ச்சி செய்து கண்டுபிடித்து இந்த காதலில் விழுந்ததாக கொஞ்சம் ஈகொவோடு பிடிவாதம் வேறு பிடிப்பார்கள் . கொஞ்சம் ஆய்வு மனப்பான்மையோடு எதிராளியை எடை போடமாட்டார்கள் ; அதற்கு பதிலாக தனக்கு தானே எவ்வளவு அன்பு செழுத்துவார்களோ நம்பிக்கை வைப்பார்களோ அவ்வளவு நம்பிக்கை அன்பு செழுத்துவார்கள் . குருட்டு அன்பு வைத்துக்கொள்வார்கள் . எச்சரிக்கையோடு கொஞ்சம் நிதானிப்போம் யோசிப்போம் என இருக்கமாட்டார்கள் . அதனால்தான் தமிழ் ; பெண்களை பேதை என்று அழைக்கிறது . நம்பமாட்டாள் ; எப்படியோ நம்பிவிட்டால் குருட்டு

நம்பிக்கையாகவே பேதையாக இருப்பாள்

அப்போது அந்த காதலன் அதை உணர்ந்துகொள்ளாமல் உதாசீனமாக இருக்கிறான் என்றால் அவர்கள் படும் அவஸ்த்தை வாயினால் விவரிக்க இயலுமா ?

தன் காதலின் மீதுள்ள அன்பினால் ; நம்பிக்கையால் நீ எந்திரி நீ எந்திரி என ஒவ்வொருவாராக ரவுசு செய்து எழுப்பிக்கொண்டு அழைத்துக்கொண்டு காதலனிடம் அக்கா வந்து விட்டாள் . அவன் இப்படிப்பட்டவன் அப்படிப்பட்டவன் என்றெல்லாம் பெருமை வேறு நிறைய சொல்லிவிட்டாள் ; இவ்வளவு அவனைப்பற்றி சொல்கிறாளே ; அவனுக்கும் இவளுக்கும் ஒரு இது இல்லாமல் இப்படி பிதற்றமாட்டாள் என்று ஊருக்கே தெரிந்திருக்கும் ; அவனிடம் சென்றவுடன் அவன் அப்படியே அந்த இதை ஊரறிய காட்டும்படி அன்பை வெளிப்படுத்துகிரானா இல்லையா பார் என்றெல்லாம் எதிர்பார்ப்பு அக்காவிடம்

இல்லாமலா இருந்திருக்கும் .

அது மட்டும் அல்லாமல் அக்கா செய்த ரவுசால் எரிச்சல் பட்ட ரெண்டு கிளடு கட்டைகள் ; இவ வகுசிய பாத்திருவோம்டி இன்னக்கு என கருவிக்கொண்டு வந்துகொண்டிருக்கிறார்கள்

அங்கு போனவுடன் அது புஸ்வானம் என்றாகி விட்டது . அவன் எதையும் காட்டிக்கொள்ளவில்லை ; அலட்டலுமில்லை ; அக்கறையுமில்லை ; அவன் பாட்டுக்கு தூங்கிக்கொண்டு இருக்கிறான் .

இப்படி ஒரு நிலைமையில் மனித காதலாக இருந்தால் என்ன நடக்கும் . அப்படியே அவமானத்தில் கூனி ; இந்த ஆளையா நாம் காதலித்தோம் ; ஏமாந்தது போதுமடா சாமி ; தூக்கிஎறிந்து விட்டு நிம்மதியாக இருப்பதுமேல் என்றாகி விடும் .

ஆனால் அக்கா என்ன செய்கிறார்கள் . இவன் மனிதனல்லவே ; பரமாத்மா ; நாராயணன் ; கடவுளின் சகல வெளிப்பாடுகளையும்

தன்னுளே அடக்கியவன் . மொத்த குத்தகைதாரன் . இவனை விட்டால் கடவுளிடம் செல்லமுடியாது .

இவன் மரணமில்லாதவன் . ஒளி சரீரம் உள்ளவன் . தேவைப்பட்டால் பூமிக்கு அவதாரமாக வருவான் . அல்லது வராமல் நித்தியஜீவனோடு பரலோகத்தில் இருந்து கொள்வான் .

ஆனால் பிறப்பெடுத்த நான் இவனின் மூலமாக அல்லாது ஒளிசரீரமோ ; மரணமில்லா பெருவாழ்வோ பெற முடியாது .

அவன் அக்கறை இல்லாமல் இருந்தாலும் இவனை இளக்கியே நான் பரலோகம் போகமுடியும் .

அக்கறையிலாமல் இல்லாமல் இருப்பது இன்று நேற்றா ?

ராமாவதராத்திலும் சீதையாக கொஞ்ச நஞ்ச அவஸ்த்தையா ?

வருவான் வருவான் என காத்துக்கிடந்தேன் . வந்த உடன் அக்கினி பிரவேசம் செய்யசொன்னான் .

அப்புறம் கொஞ்ச நாள்தான் நிம்மதியாக வாழ்ந்தது . உண்மை என்பது என்னவாக இருந்தாலும் ராஜநீதி என்பது வேறு . அவன் பொதுமக்களுக்காக சந்தேகம் இல்லாத வெளிப்படையான வாழ்வு வாழவேண்டும் என்று என்னை காட்டில் விட்டு விட்டு பிரிந்தேதானே வாழ்ந்தான் .

ஆனாலும் பரந்தாமன் . மனித பிறவியால் வந்த பாவங்கள் ; சாபங்கள் தீராமல் பரலோகம் போகமுடியாது . அதற்கு இவன் கருணை வைத்து பார்த்தால் அன்றி வேறு வழி கிடையாது

ஆகவே அக்கா எந்த மான அவமானமும் அடையாமல் ; சரணாகதி ஒன்றையே ஆபரணமாக கொண்டு எப்படி வேண்டுகிறாள் பாருங்கள் .

பிரபஞ்சத்தின் அருள்மையமான அரங்கத்தின் அரசனே .

நீ தூங்குகிற கட்டிலின் கீழே உன் அருளை வேண்டி ; சத்சங்கம் கூடி எங்கள் தலையை சாய்த்து கிடக்கிறோம் .

கிங்கிணி வாயழகா . நீ பேச மாட்டாய் ; ஆனால் பேசினாலோ ஞானமும் தத்துவமும் கலகலவென உதிரத்தொடங்கி விடும் .

நீ பேசவே வேண்டியதில்லை . தாமரை மொட்டு போல மூடிகிடக்கிற அந்த ரெண்டு கண்ணையும் திறந்து எங்களைப்பார்த்தாலே போதுமே

சூரியனும் சந்திரனும் உலகத்தின் மீது உதித்தவுடன் இருள் அகன்று விடுகிறதல்லவா ?

அப்படி அந்த இரண்டு கண்களும் எங்களைபார்த்தாலே போதும் எங்களின் பிறவி நீளுவதற்கான சாபம் அழிந்து விடுமல்லவா ?

அக்கா உண்மையில் நிலைமையை திறமையாக சமாளிக்கிறாளோ ; இல்லை , சரணாகதி தத்துவத்தின் உச்சத்திலே நின்றுதான் இப்படி பாடமுடியும்

நாராயணனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ நாராயணனாய

சிவனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ சிவாய

ஆதிசேஷனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே

நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ ஆதிசேஷாய

ஆதிசக்தியாக வெளிப்பட்ட ஓரிறைவனையே
நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ ஆதிசக்தியாய

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

**திருப்பாவை 23**

மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்து உறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து
வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலே நீ பூவைப்பூ வண்ணா
உன் கோயில் நின்று இங்ஙனே போந்தருளிக் கோப்புடைய
சீரிய சிங்காசனத்து இருந்து யாம் வந்த
காரியம் ஆராய்ந்து அருளேலோர் எம்பாவாய்

ஏன் சிங்கம் காட்டுக்கு ராஜாவாக இருக்கிறது என்பதை பற்றி கோதை அக்கா இங்கு சொல்கிறாள்

ஆஸ்திரேலியாவில் காட்டுத்தீ காடுகளில் பரவிக்கொண்டு உள்ளது

தீ பரவுவதை கண்டு தப்பி ஓடுவதற்கு கூட தெரியாமல் பேந்த பேந்த விழித்துக்கொண்டு அங்கு நிற்கும் மிருகங்களை பிபிசி காணொளி எடுத்து போடுகிறார்கள்

பரிதாபமாக இருக்கிறது

தீயை உணர்ந்து தப்பி ஓட அவை அறியவில்லை

ஆனால் அக்கா சொல்கிறாள்

மாரி மழை கணத்து பெய்ததால் சுருண்டு படுத்து உறங்கும் சிங்கம் ; தீயின் வெப்பத்தை உணர்ந்து கண்விழித்து கர்ஜித்து பிடரி மயிரை உதறி தாவி புறப்பட்டு தீ இல்லாத இடத்துக்கு வந்து சேருமாம்

அதனுடைய கர்ஜனை நாலா பக்கமும் சுழன்று மிருகங்களை உசுப்பி அதன் கர்ஜனையை தொடர்ந்து வந்து தப்பி பிழைக்க வழிகாட்டுமாம்

அக்கா எவ்வளவு அனுபவசாலி

உவமை ;ஒப்பீடு செய்வதிலும் எவ்வளவு நேர்த்தி

கிறிஷ்ணனை நீ சிங்கம் போன்றவன்

என்கிறாள்

அறிவு திறன் ; தப்பும் நேர்த்தி ; தப்புவிக்கும்
வல்லமை உள்ளவன் என்கிறாள்

உலகம் முழுவதும் சிங்காசனமே ஆட்சி
பீடமாக இருக்கிறதே ; அதன் காரணம்
காட்டுக்கு அதிபதி என்பதற்காக மட்டுமல்ல
;அதன்
அறிவு திறன் ; தப்பும் நேர்த்தி ; தப்புவிக்கும்
வல்லமை ஆகும்

சர்வலோகாதிபதியான நீயும் சிங்காசனத்தில்
இருந்து நாங்கள் உம் புகழ் பாடி
வந்திருப்பதின் நோக்கத்தை ஆராய்ந்து
அருள்வாயாக

## திருப்பாவை 24

திருப்பாவை என்பது ஆண்டாள் என்ற ஒரு வசதியான தமிழ்ப்பெண் வேலை வெட்டி இல்லாததால் எழுத்தாக்கம் என்ற சுய திருப்திக்காக பாடியதல்ல ; கவிதாயிணி என்ற பட்டத்தை போட்டுக்கொண்டு தத்து பித்து கண்டேன் காதல்கொண்டேன் தவித்தேன் தடுமாறி தடுமாறி விழுகிறேன் என கணவர் காசில் புத்தகம் போட்டு புகழ் தேடுகிற ரகமும் அல்ல

முன்பே சொல்லியிருக்கிறேன் ; ராமாவாதாரத்தில் சீதையாக அவதரித்த பூமியின் வியாபகம் ஒரு ஆத்மாவாக பூமியில் வந்து விட்டதால் நிறைவடைய வேண்டி அந்த பரந்தாமனை பாடி துதித்து பக்தி ரசத்தை மானுடர்களுக்கும் கொடுத்து தானும் முழுமையடைய ஆண்டாளாக அவதரித்தது

பக்திரசம் மட்டுமல்ல ; ஞான ரகசியங்களும் ஆங்காங்கே அள்ளித்தெளித்திருப்பார் .

ஸ்ரீகிரிஷ்ணரே ராமாராக வந்தவர் என்பதை ஆண்டாளும் வெளிப்படுத்தினார் ; அதுமட்டுமல்ல கிருத யுகத்தில் சிவனார் அறிமுகப்படுத்திய மாயோன் சேயோன் குரு வழிபாட்டில் சேயோன் என முன்னறிவிக்கப்பட்ட முருகன் ; வேறு யாரோ அல்ல மாயோன் பூமியில் யுகங்கள் தோறும் அவதரித்து வரும் அவதாரம் என்பதின் முன்னறிவிப்பு என்பதையும் ஆண்டாள் வெளிப்படுத்தியுள்ளார்

திருப்பாவை 24 ல் இவ்விவரங்கள் உள்ளது

அன்று இவ் உலகம் அளந்தாய் அடி போற்றி
சென்றங்குத் தென் இலங்கை செற்றாய் திறல் போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ் போற்றிகன்று குணில் ஆவெறிந்தாய் கழல் போற்றி
குன்று குடையாய் எடுத்தாய் குணம் போற்றிவென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி
என்றென்றும் உன் சேவகமே ஏத்திப் பறை

கொள்வான்இன்று யாம் வந்தோம்
இரங்கேலோர் எம்பாவாய் 24

மாபலி சக்கரவர்த்திக்கு தானம் செய்கிறேன் என்ற சுயமகிமையே தடையாகி விடுகிறது . சுயத்தை நிக்கிரகம் செய்தால் ஒழிய அவருக்கு முழுமை கொடுக்க முடியாது . ஆகவே திரிவிக்ரமனாக வந்த பரமாத்மா ; ஜீவாத்மாவின் ஆணவம் , கன்மம் , மாயைகளை வெற்றிகொள்ள மூவடி கேட்டு ஒரே அடியில் உலகம் முழுவதும் அளந்தார் . அடுத்த அடியிலோ பிரபஞ்சம் முழுவதும் அளந்து விட்டார் மூன்றாவது அடிக்கோ இடமில்லை . தன்னை அவருக்கு கீழ்படிதலுள்ளவானாகி அவரின் பாதத்தில் ஒன்றுவதைத்தவிர வேறு வழி இல்லாமல்போகிறது .

ஒரு ஆத்மா உலகம் முழுவதையும் அறிந்து கடந்தாலும் பிரபஞ்ச ரகசியங்கள் அனைத்தும் அறிந்து தெளிந்தாலும் பரமாத்மாவோடு ஒன்றி கடவுளுக்கு கீழ்படிதலுள்ள பக்தியை கற்றுக்கொள்ளா விட்டால் முழுமை என்பது

இல்லை

சகல ஆத்மாக்களின் அடிப்படையான பரமாத்மாவானவர் சற்குருவாக சகலருக்கும் எது தேவையோ அதை படிப்படியே கற்றுக்கொடுத்து முழுமையடைய செய்வார் . இது அவரது பணியாக இருக்கிறது . அதனால்தான் அடி போற்றி என்கிறார்

இலங்கைக்கு ராமர் செல்லவேண்டியது அவரது அவதார நோக்கம் . சீதையை ராவணன் தூக்கி சென்றது ஒரு கருவி – உளவு . ராவணன் மாபெரும் தபஸ்வி . அவருக்கு அழிவு அவரது அடியிலிருந்தே சீதை என்ற மகளாக முழைத்தது . ராவணனும் அறிவார் .

அவரால் கடலில் விடப்பட்ட குழந்தை சீதை என்பது . குழந்தையை பாதுகாக்க தன்னால் தவம் செய்து பெறப்பட்ட சிவதனுஷையும் உடன் வைத்தே பேழையை கடலில் விட்டார் . அந்த சிவதனுஷை ராமர் முறித்தபோது மற்றொரு சிவதனுஷை வைத்திருந்த பரசுராமர் மற்றொரு வில்லையும் உன்னால்

முறிக்க இயலுமா என கேள்வி கேட்கவில்லையா ?

ஏனென்றால் அப்படிப்பட்ட ஒரு நபர் பரமாத்மாவின் அவதாரமாக மட்டுமே இருக்கமுடியும் என்பதை பரசுராமரும் அறிவார் . அதை சோதித்து உறுதி செய்துகொண்டார் . இவ்விசயம் ராவணனுக்கும் தெரிந்தேதான் இருந்தது . சீதையை கவர்ந்து சென்று காவல் செய்தாரே தவிர அவர் சீதையை கெடுக்க முயலவே இல்லை . மகளை வனவாசத்தின் கொடுமையிலிருந்து காப்பதும் ஒன்று . மற்றொன்று கிருத யுகத்தின் முடிவு காலங்களில் உலகத்தில் தன்னிச்சையாக வளர்ந்த ஒரு கோட்பாடு – மதமாச்சரியம் சைவம் மட்டுமே உண்மை – சிவன் மட்டுமே கடவுள் என்ற கொள்கை .

சிவன் பூமியில் இருந்து வழிநடுத்தும் வரை பூமி முழு தர்மத்தில் இருந்ததாகத்தான் சகல வேதங்களும் – குரானும் கூட ஒப்புக்கொள்கிறது . ஆனால் சிவன்

வைரவனாக ஒளி சரீரம் அடைந்து பரலோகம் சென்று ருத்ரன் ஆன பிறகு பூமியில் அவரை குருவாக – குலதெய்வ வழிபாடாக வைத்து வழிபட ஆரம்பித்தார்கள் . அப்போது அவர் சொல்லி வைத்த மாயோன் சேயோன் மூலமாக கடவுளை வழிபடும் முறையை முற்றிலும் ஒதுக்கி விட்டு சிவனை மட்டுமே வழிபடும் முறையை மனிதர்கள் உருவாக்கிக்கொண்டார்கள் . அவர்கள் மாயோனின் தயவு தேவையில்லை என்பதுபோல உதாசீனம் செய்யும் நடைமுறையும் – சைவ வைணவ மதச்சண்டைகளும் வந்து விட்டது . வைணவம் மற்றும் சதுர்வேதங்களுக்கு ஆசானான வியாசரை சைவத்தில் ஒதுக்கி வைத்து சைவசித்தாந்தங்களை மட்டு கடைபிடித்தால் போதும் என்கிற மதமாச்சாரியம் ஆரம்பித்த காலம் இது .

சிவனிடம் வரம் பெற்றவர் என்ற முறையில் சைவவெறியை இலங்கையை தலைமையகமாக வைத்து ராவணன் முன்னின்று உலகத்தில்

நடத்திக்கொண்டிருந்தார் . இமய மலை வரை ராவணனின் ஆட்கள் சென்று சதுர் வேதத்தை கற்பிக்கவும் வளர்க்கவும் செய்த வசிஸ்ட்டர் விசுவாமித்ரர் போன்றோரின் ஆசிரமங்களை தாக்கியும் வந்தார்கள் .

ஆகவே இதை சரி செய்ய ராவணாதிகளின் கொட்டத்தை அடக்கவே ராமர் அவதரிக்க வேண்டும் என்ற வேண்டுதல் இம்முனிவர்களால் ஏறெடுக்கப்பட்டு ராமர் அவதரித்தார் . ஆக ராம அவதாரமே குலதெய்வமான சிவனின் மூலமாக கடவுளை வழிபடுவது என்ற முறையை குலதெய்வத்தை மட்டும் வழிபடுவது என்பதாகவே மாற்றிக்கொண்டார்களே அந்த தவறை சரி செய்வதுதான் .

சீதையை ராமர் மணக்கும் முன்னமே முனிவர்களின் ஆசிரமங்களை தாக்க வந்த இலங்கையர்களை ராமர் அழித்தார் என்ற செய்தி ராவணனுக்கு தெரியாமலா இருந்திருக்கும் . அப்போதே பகை ஆரம்பித்து விட்டது

சிவதனுசோடு கடலில் விடப்பட்ட குழந்தை சீதையாக வளர்ந்திருக்கிறது என்ற விபரம் ஆரம்பத்தில் ராவணனுக்கு தெரியாமல் இருந்திருக்கலாம் ; ஆனால் சுயம்வர செய்திகளும் பரசுராமரிடம் இருந்த சிவனின் வில்லையும் ராமர் உடைத்தார் என்ற சேதியையும் ராவணன் அறிந்தபோது தனக்கு அழிவை தரும் சீதை தனது முரண்பாடான ராமருக்கு மனைவியும் ஆகி விட்டாள் என்பது இன்னும் ஆத்திரத்தை உண்டாக்கி விட்டது . சீதையும் ராமரும் சேர்ந்திருந்தால் தனக்கு விரைவில் அழிவு வரும் என்பதும் அவர்களை மறைத்து பிரித்து வைக்கவேண்டும் என்ற முடிவுக்கு ராவணன் வந்தது . கவணியுங்கள் வெளிப்படையாக சண்டை செய்து சீதையை தூக்கி செல்வதற்கு பதிலாக மறைவாக யார் என்று தெரியாமலும் எங்கு சீதை இருக்கிறாள் என்பது வெளிப்படாமல் இருக்கவேண்டும் என்றுதான் ராவணன் தூக்கி சென்றார் . ராவணன் பெரும்படையோடு வந்து காட்டில் தனியே இருந்தவர்களை தாக்கி சீதையை கொண்டு சென்றிருக்க முடியும் . அப்படி

செய்தால் உடனே ராமர் ராவணனுடன் யுத்தம் செய்வார் ; ஆனால் காலத்தை நீடித்து சீதையை கண்டுபிடிக்கவே ராமர் அலையட்டும் என்றுதான் களவாக எடுத்தது ; ஆனாலும் சில சாட்சிகளால் ராவணனைப்பற்றிய சேதி வந்தது ; இருப்பினும் அனுமனை ரகசியமாக அனுப்பி உறுதி செய்யவேண்டியிருந்தது

இவைகளை நிதானித்தீர்களானால் சீதையின் நிமித்தமாக இச்சண்டை வரவே இல்லை . குலதெய்வத்தை மட்டும் வழிபட்டு விட்டு இறைவனை வழிபாடாமல் இரட்டடிப்பு செய்யும் தவறை சரி செய்ய உண்டானதே இந்த யுத்தம் .

சிவனை குலதெய்வமாக வழிபட்டதோடு தங்கள் முன்னோர்கள் யாரெல்லாம் நன்கு வாழ்ந்தார்களோ அவர்களின் சமாதியின் மீது லிங்கம் ஒன்றை வைத்து இவரும் ஈஸ்வரனாகி விட்டார் என அவரது பெயருடன் ஈஸ்வரன் என்று சேர்த்து கோவில் கட்டும் பழக்கம் வந்துவிட்டது

ராவணனும் தனது பெயருடன் ஈஸ்வரன் என்ற நாமத்தை தரித்துக்கொண்டான் . இவைகளை மாற்றி சிவனின் மூலமாகவும் நாராயணன் மூலமாகவும் கடவுளை வழிபடும் நெறியை உருவாக்க வந்தவரே ராமர் . இலங்கையில் அசுர ஆவிகளின் ஆதிக்கத்தை அழிக்கவே ; சரியான நெறியை வளர்க்கவே விபீசனருக்கு ஸ்ரீரெங்க மூர்த்தம் வழங்கப்பட்டது . ஆனால் அது காவிரிக்கரையில் தங்கி இலங்கை போய்ச்சேரததும் இன்று வரை அசுர ஆவிகள் இலங்கையின் நிம்மதியை கெடுத்து வருகின்றன .

என் சிறு வயதில் எனக்கு உண்டான ஒரு கணவு - தரிசனம் பசுமையாக நினைவில் உள்ளது . இலங்கை கடலுக்கு இக்கரையில் நின்று கொண்டிருக்கிறேன் . விதவைக்கோலத்தில் உள்ள தாயார் ஒருவர் என்னிடம் கை எடுத்து கும்பிட்டு தாண்டி வாருங்கள் என்று கெஞ்சுகிறார்கள் . ரெம்ப சின்ன வயது ; எனக்கு ஒன்றுமே புரியவில்லை .

ஒருவேளை இறைவன் என்னை இறைபணிக்கு அபிஷேகித்து நான் இலங்கைக்கு செல்லும் காலத்தில் மட்டுமே அங்கு நிம்மதி திரும்பும்போல . இந்த எண்ணம் வந்தபிறகு நான் இரண்டுமுறை சேதுக்கரை சென்று என் ஆவிமண்டல குரு ஆஞ்சநேயரின் காலடியில் அமர்ந்து இலங்கைக்காக பிரார்த்தித்தேன் ; அப்போதெல்லாம் அங்கு ஏதோ சில மாற்றங்கள் வந்துகொண்டுதான் இருக்கிறது .

இந்த அசுர ஆவிகளை – இறைவனை வழிபடாமல் எப்படியாவது கெடுத்து பூமியில் வந்த அவதாரங்களை மட்டும் வழிபட்டால் போதும் என திரும்ப திரும்ப மனிதர்களுக்கு உபதேசிக்கும் ஆவிகளை கடிந்து கொண்டார் ராமர் . அடக்கியும் வைத்தார் . ஆண்டாளும் தென்னிலங்கை செற்றாய் ; திறம் போற்றி என்கிறார் . கலிகாலத்தின் முடிவு வரை அசுர ஆவிகளை முற்றிலுமாக அழிக்கமுடியாது ; ஆனால் அடக்கி வைக்கமுடியும் செற்றாய் என்பதின் அர்த்தம் அதுவே

அடுத்த வரி வென்று பகை முடிக்கும் நின் கை வேல் போற்றி என்கிறார் . நாராயணன் எங்குமே வேல் வைத்திருக்கமாட்டார் . ஆனால் ஞானவேல் உடையவன் முருகன் மட்டுமே . ஸ்ரீகிரிஷ்ணர்தான் ஸ்ரீராமர் என்பதை மட்டும் ஆண்டாள் சொல்லவில்லை ; முருகனும் நீ தான் என்கிறார் .

பூமியில் வருகிற அவதாரம் என்பதை அடையாளப்படுத்தி சிவனார் முருகன் என்று சொன்னார் . அவரே தனக்கும் ஞான குரு தகப்பன் சாமி என்றார் . அவரே மாயைகளை அழித்து ஞானத்தை வழங்கும் ஞானவேலை வைத்திருக்கிறவர் . இந்த வேலால் மட்டுமே எதிரிகளான மாயைகளை அழிக்கமுடியும் . திருப்பதியில் உள்ள சிலை முருகனா ; பெருமாளா என்ற குழப்பம் இருந்ததை உலகம் அறியும் . அதை பெருமாள் என்று ராமானுஜர் ஒரு டெஸ்ட் வைத்து தீர்ப்பளித்தார் என்பது வரலாறு . ராமானுஜர் வரும் வரை சிலர் அதை முருகன் என்றும் பெருமாள் என்றும் வழிபட்டு வந்தனர் .

உண்மை என்னவென்றால் பரலோகத்தில் பெருமாள் ஆகிய பரமாத்மா எப்போதெல்லாம் மனிதனாக அவதரித்து வருமோ ராமர் கிரிஷ்ணர் இயேசு மூவரும் முருகனே . இவர்களால் பூமிக்கு கொடுக்கப்பட்ட உபதேசங்களே – வேதங்களே ஞானவேல் .

நாராயணன் நாமத்தினாலும் சிவனின் நாமத்தினாலும் சேஷனனின் நாமத்தினாலும் ஆதிசக்தியின் நாமத்தினாலும் கடவுள் தங்களையும் தங்கள் குடும்பத்தாரையும் தமது அருளால் நிரப்ப வேண்டுகிறேன்

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

## திருப்பாவை 25

498 ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓர்
இரவில் ஒருத்தி மகனாய் ஒளித்து
வளரத் தரிக்கிலான் ஆகித் தான்
தீங்கு நினைந்த கருத்தைப்
பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே.,
உன்னை அருத்தித்து வந்தோம்
பறை தருதியாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும்
யாம் பாடி வருத்தமும் தீர்ந்து
மகிழ்ந்தேலோர் எம்பாவாய்
25

ஒருத்தி மகனாய் பிறந்து ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளிந்து வளர

அக்கா இங்கு கிறிஷ்ணரின் நோக்கம் ஒன்றை கோடிட்டு காட்டுகிறாள்

ராமாவதாரத்தில் அறிந்தோ அறியாமலோ தன் அன்புக்கும் மரியாதைக்கும் உரிய

கைகேயியை மகிமைப்படுத்த முடியவில்லை . உலகத்தால் அவமதிப்புக்கு ஆளானாள்

கைகேயியை கெடுத்தவள் கூனி

அன்பிலே விஷத்தை கலந்தவள் கூனி

சொல்வார் பேச்சால் கெட்டவள் அவள்

பெருந்தீமைகள் உண்டாகி கணவனை இழந்தாள்

பிரியமானவனை காட்டுக்கு அனுப்பி ; சொந்த மகன் பராதனாலும் ஒதுக்கி வைக்கப்பட்டாள்

அவதார நோக்கம் நிறைவேற பழிக்கு உரியவளானாள்

ஆகவே மாற்றாந்தாயை மகிமைப்படுத்த கிறிஷ்ணாவாதாரத்தை பயன்படுத்திக்கொண்டார்

யசோதை தான் உண்மைத்தாய் என்றே அறிந்திருந்தாள்

ஆனால் கிறிஷ்ணர் ஒருத்தி மகனாய் பிறந்து

ஓரிரவில் ஒருத்தி மகனாய் ஒளிந்து வளர்வதை அறிந்தே இருந்தார்

தன்னை கொல்ல வல்ல குழந்தை ஒன்று அவதரித்து பிருந்தாவனத்தில் வளர்கிறது என்பதை அதை கொல்ல வேண்டும் என்ற நோக்கத்தில் கம்ஸன் அறிந்திருந்தான்

நாராயணன்ரே கிறிஷ்ணனாக பூமிக்கு அவதரித்து வந்திருந்தாலும் ; அவரை யார் என்று யாராலும் அவதானிக்க முடியவில்லை

கம்ஸன் பல வகையான அசுர ஆவிகளை அக்குழந்தையை கொல்லும்படியாக ஏவி விட்டான்

அவை அனைத்தையும் அந்தக் குழந்தை முறியடித்தது

ஆனால் அதை பார்ப்போர்க்கு ஏதோ அமானுஷ்யம் நடக்கிறது என்று மட்டும் தான் சொன்னார்கள்

அதே நேரத்தில் அதன் தாயான யசோதைக்கோ இனம் புரியா பயம் ; கவலை

; குழப்பத்துடன் நாட்கள் ஓடின

இதுவும் அல்லாமல் அந்தக் குழந்தை அடிக்கிற லூட்டிகள் பற்றியும் ஓயாது புகார்கள் ; ஆனால் ஒன்றுமே நிருபனை ஆகவில்லை

ஆகவே அவள் சிடுசிடுக்கவும் ; தண்டனை கொடுக்கவும் ஆரம்பித்திருந்தாள் ஒன்றும் அறியாத குழந்தையை போலவே நடித்துக்கொண்டு தன்னை இன்னார் என்றும் உணர்த்தி வந்தார் ஸ்ரீகிறிஷ்ணர்

அவள் கொடுக்கிற தண்டனைகள் அனைத்தையும் உள்ளன்போடும் ஏற்றதுபோலவே நடித்தும் வந்தார்

பிரம்மா ; இந்திரன் ; வருணன் முதலிய தேவர்களும் கூட ; ஒரு மனிதனா இத்தகைய வல்லமை உள்ளவன் என சோதித்து அவரை இன்னார் என்று அறிந்துகொண்டனர்

யுகங்கள் தோறும் அவதரிப்பேன் என கீதையின் கிறிஷ்ணர் சொல்லிவிட்டார்

சொல்லிவிட்டார் என மனிதர்கள் சொல்லிக்கொள்வார்களே தவிர அவர் அவதரித்து வந்தபோதெல்லாம் அவர் இன்னார் என்று அறியாமல் முடிந்த அளவு கெடுதல் தானே செய்தார்கள்

ராமருக்கும் மன நோவைத்தானே தந்தார்கள்

கிறிஷ்ணருக்கும் ; இயேசுவுக்கும் நோவைத்தான் தந்தார்கள்

ஆனாலும் இந்த அவதாரங்கள் அனைத்தும் அவர்களது அன்னையரின் பெயரால் அழைக்கப்பட்டனவே தவிர தகப்பனை அவ்வளவு முக்கியப்படுத்தவில்லை

கோசலை ராமா ; கைகேயி ராமா ; யாஸோதை மைந்தா ; மேரி மைந்தா என்றுதான் அவர்கள் அழைக்கப்பட்டார்கள்

காரணம் ஒன்றே ஒன்று தான்

பூமியில் அவதார நோக்கம் நிறைவேற ; குடும்ப பாவங்கள் ; குல பாவங்கள் ஏறாதவர்களாக இவர்கள் அவதரிக்க

வேண்டியிருந்தது

அதற்காக ஆண் வித்து கலக்காமல் ; பெண்ணின் சூலை மட்டுமே பயன்படுத்தி அதிதேவர் நாராயணரின் ஆத்மா பிறவியெடுத்தது

அதனால் அவர்களுக்கு தகப்பனின் ஆதிக்கம் கிடையாது

இது ஒரு பக்கம் இருக்க ; யசோதைக்கும் கிறிஷ்னருக்கும் உள்ள பிணைப்பு ; மகிமை வேறு யாருக்கும் கிடையாது

ராமாவதாரத்தில் கோசலை பெற்றாளே தவிர வளர்த்தவள் ஆளாக்கியவள் அனைத்துமே கைகேயியே ஆகும்

அவள் யுத்த கலைகளிலும் வல்லவள்

மாபெரும் யுத்தம் ஒன்றில் தசரதருக்கு ரதம் ஒட்டி உயிரை காத்து யுத்தத்திலும் ஜெயம் பெற வைத்தவள் கைகேயி

அரசியாக அனைத்தையும் நிர்வாகம்

செய்தவளும் அவளே
கூனியின் தூண்டுதலால் அவள் ராமர்
வனவாசம் போகட்டும் என்று உத்தரவு
இட்டாலும் உள்ளார்ந்த அன்பால் அவள்
புழுங்கி செத்தவள்

ராமருக்கும் அவள் மீது அலாதி பிரியம்

ஆனால் விதியின் கருவியாகிய கைகேயி
உலகத்தால் தூற்றப்பட்டவள் ஆனாள்

அவளுக்கு மகிழ்ச்சியை கொடுக்கவே ;
தேவகி வயிற்றில் பிறந்தாலும் கைகேயின்
மறுபிறவி யசோதையிடம் ஓட்டிக்கொண்டு
அவளை மகிழ்ச்சி படுத்தினார் ராமர் @
கிறிஷ்ணர்

இது இப்படியிருக்க அந்தக்குழந்தையை
கொல்ல பல முயற்சிகள் எடுத்தும் வெற்றி
பெறாததால் அதன் புகழ் கம்ஸனின்
வயிற்றில் நெருப்பாக நின்றது என்கிறாள்
கோதை அக்கா

கிறிஷ்ண லீலைகள் என்கிறார்களே

அவைகளை கேட்பதுவும் ஹரிநாம பஜனை பாடுவதும் கலியுகத்தில் மேன்மை பயப்பவை

கோதை அக்கா நம்பிக்கை ஊட்டுகிறாள்

கிறிஷ்ணரை நெருங்கி வந்தால் ;திருத்தக்க செல்வம் கொடுப்பார்

அவரை சேவித்துக்கொண்டு வருத்தம் நீங்கி மகிழ்ந்திருக்கலாம்

## திருப்பாவை 26

மாலே. மணிவண்ணா. மார்கழி
நீராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன
கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பால் அன்ன வண்ணத்து உன் பாஞ்ச
சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்
பாடுடையனவே
சாலப் பெரும் பறையே பல்லாண்டு
இசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆழி நிலையாய் அருளேலோர்
எம்பாவாய்

மால் என்றால் எல்லை

எல்லை என்றாலேயே ஒரு பொருள்
அல்லது பௌதீகம் அல்லது ஆட்சி
அமைப்பு என்று அர்த்தம்

வெட்டவெளியில் சகல பௌதீகமும்
அவற்றிர்க்கு எல்லை எதுவோ அதுவே

மால்

எல்லப்பன் ; எல்லாளன் என்றெல்லாம் பெயர் வைத்திற்கிறார்களே அந்த எல்லையானவரே திருமால்

மாலே ; மணிவண்ணா

இந்த பிரபஞ்சம் முழுதும் பால்வெளி மண்டலத்தில் ஓடிக்கொண்டிருக்கிறதாம்

பால்வெளியையே மணிவண்ணன் என்கிறார்கள்

மேலே நான்குறிப்பிட்டவாறு மார்கழி விரதம் இருப்போர் வேண்டுதல் என்னவென்றால் உன் கையில் உள்ள பாஞ்சாசைனியம்

திருமாலின் கையில் உள்ளது வலம்புரி சங்கு

பால் வெளியில் இயங்கும் இயக்கத்திலிருந்து ஓம் என்ற பிரணவ சத்தம் வந்துகொண்டே இருக்கிறது

என்பார்கள்

இட வலமாக சுழலும் பிரபஞ்ச உறுப்புகள் பிரணவ ஓசையால் ஒன்றை ஒன்றை வலுப்படுத்திக்கொள்கின்றன

அதிலிருந்து வரும் ஒளிக்கற்றைகள் வளர் சீதை மாற்றத்தை உண்டாக்குகின்றன

இதை சுதர்சன சக்கரம் என்றார்கள்

ஒலியும் ஒளியுமே சக்தியாக ஆற்றலாக காலந்தோடி கொண்டிருக்கின்றன

இந்த இயற்கை என்பது படர்க்கையாக இருப்பதும் உண்மை ; அதுவே பிரகிருதியாக ஒரு நபராக - அதிதேவர் நாராயணன் ஆக இயங்கிக்கொண்டிருப்பதும் உண்மை

இயற்கையாக இருக்கும் போது கோல விளக்காகவும் ; கொடியாகவும் ; விதானமாகவும் இருக்கிறதாம்

அதுவே நபராக இயங்கும் போது

ஆழியில் நிலைத்துள்ள நாராயணனாகவும் உள்ளாராம்

அத்வைதமும் உண்மை ; துவைதமும் உண்மை என்கிறாள் கோதை அக்கா

திருப்பாவை 27

கூடாரை வெல்லும் சீர்
கோவிந்தா உந்தன்னைப் பாடிப் பறை
கொண்டு யாம் பெறும் சம்மானம் நாடு
புகழும் பரிசினால் நன்றாகச் சூடகமே
தோள் வளையே தோடே செவிப் பூவே
பாடகமே என்றனைய பலகலனும் யாம்
அணிவோம் ஆடை உடுப்போம் அதன்
பின்னே பாற் சோறு மூட நெய் பெய்து
முழங்கை வழி வாரக் கூடி இருந்து
குளிர்ந்தேலோர் எம்பாவாய்

மார்கழி விரதத்தில் மிக முக்கியமான நாள் வைகுண்ட ஏகாதசி . அந்த நாள் பெருமாள் கோவிலில் இரவு முழுவதும் விழித்திருந்து பூசை புனஸ்காரங்கள் பஜனை செய்வார்கள் அதிகாலை சொர்க்கவாசல் என்றொரு வடக்கு வாசலை திறப்பார்கள் . இந்த வாசல் அந்த ஒருநாள் தவிர மற்ற நாட்களில் திறக்கப்படுவதில்லை

இந்த வாசல்வழியாக பிரவேசித்தால் நாம்

சொர்க்கம் செல்வதற்கு அச்சாரம் கிடைப்பதாக நம்பிக்கொண்டு முண்டியடிப்பதால் நம் கவனம் அந்த வாசலிலேயே நின்றுவிட்டது

ஆனால் இந்நாளின் மிகமுக்கியமான சேதி வேறு

அது அசுரர்களை யாராலும் அடக்க முடியவில்லை என்பதாகும் அவர்களின் தொல்லை எல்லை மீறி விட்டது அக்கிரமம் அளவு கடந்துவிட்டது . தாங்க இயலாத தேவர்கள் நாராயணனிடம் மார்கழி விரதமிருந்து முறையிட்டார்கள் . அப்போது வைகுண்ட ஏகாதசி அன்று அவர் அழகான மோகினியாக அவதாரமெடுத்தார் . யாருக்கும் அடங்காத அசுரர்கள் மயங்கிப்போய் சிந்தை கலங்கி நின்றார்கள் . அப்போது நாராயணன் அவர்களை அழித்துவிட்டார் என்பதாகும்

இந்த முக்கியமான சேதி சொர்க்கவாசலால் ஏன் ஓரங்கட்டப்பட்டது

திருப்பாவை 27 ல் கூடாரை வெல்லும் சீர்

கோவிந்தா என்கிறார் மகாகுரு ஆண்டாள் கூடாரை சேராக்கூடாதவர்களை வெல்ல க்கூடியவரான சீர் கோவிந்தர்

கோவிந்தர் பசுக்கூட்டத்தை கை தூக்கி விடுபவர் . அக்கா ஆண்டாள் வார்த்தைக்கு வார்த்தை அர்த்தம் மெருகு ஏற்றிக்கொண்டே இருப்பார்

பசுவாகிய பக்தர்களை தரம் உயர்த்தி பரிசுத்தப்படுத்துவதால் சீர் கோவிந்தர் சீர் படுத்துகிறவர்

பக்தர்களிடம் எதை சீர்படுத்த வேண்டும் . அவர்களிடமுள்ள தவறுகளை சீர் படுத்தவேண்டும் . சீர் படுத்தவேண்டியது அசுர குணங்களை . அசுரர்கள் என்ற ஆவிமண்டல சக்திகள் தனியே இருந்தாலும் அந்த சக்திகளால் தூண்டப்பட்ட பக்தர்களின் சிந்தை இருக்கிறதே அதுவும் அசுர சிந்தையே . பக்தர்கள் அல்லாதவர்களிடமோ அசுர சிந்தையால் கடவுள் பயம் அற்றுப்போய் கொடுமை செய்து அதை ரசிக்கும்

மனநிலை மனிதர்களை அரக்கர்களாக மாற்றி வைத்திருக்கிறது

அசுரர்கள் கூட இறைவனுக்கு அஞ்சுவார்கள் ஆனால் அசுரர்களுக்கு இடம் கொடுத்த அரக்கர்கள் இருக்கிறார்களே அவர்கள் யாருக்கும் அஞ்சவே மாட்டார்கள் அசுரர்களும் மனிதர்களும் கூட்டணி அமைத்துவிட்டால் பலமோ பலம் அடைந்து விடுவார்கள்

அப்படிப்பட்ட அசுரர்களையும் அரக்கர்களையும் சீர் படுத்துவாராம் கோவிந்தன்

அது எப்படி என்றால் அவர் மோகினியாக அன்னை நாராயணியாக வெளிப்பட்டு என்பதே வைகுண்ட ஏகாதசி நாள் செய்தி

.

அவளின் அன்னை என்ற தாய்மைக்குள் அரவணைப்பிற்குள் அனைவரும் அடங்கி விடுவார்கள்

அசுரர்களையும் ஈர்த்து அவர்களை சிந்தை

அற்றவர்களாக மாற்றி தன் முன்னால் மயங்கி நிற்கும்படியாக அன்னை நாராயணி செய்துவிடுகிறாள் . பிற்பாடு அவர்களை சீர் படுத்தியும் விடுவாள்

இவை அனைத்துமே ஒரு நாளில் நடக்கும் காரியமில்லை . யுக முடிவு வரை தொடரும் ஒரு தொடரோட்டம்

கருப்புசாமியும் அன்னை நாராயணியும்

பாவத்தில் வீழ்ந்தவர்கள் மட்டுமே பாவத்தை உணர்ந்து திருந்தி ஞானம் அடையமுடியும்

ஒன்றுமே இல்லாமல் தூய்மையாக இருந்தால் அது ஞானமாகாது பாவத்தின் சகல ஆழத்தையும் உணர்ந்து அது அவசியமில்லை என இயல்பாலும் கடந்துவிட்ட நிலை வந்தால் மட்டுமே பட்டறிவு ஞானம்

ஆக மனித ஆத்மாக்களை மாயையுள் விழ வைப்பதன் நோக்கம் அவர்கள் அப்படியே கெட்டு நேராக நரகத்தை

நிரப்புவதற்கல்ல . அங்கிருந்து அவர்களை ரட்சித்து வெளியேற்றி பாவத்தை பரிகரித்து ஞானம் கொடுப்பதற்கு

இந்த வேலையை யார் செய்கிறார்கள் என்றால் அதிதேவர் நாராயணியே

தேவர்களாக இருந்தவர்களே அசுரர்களாக மாறினார்கள் . எதன் நிமித்தம் என்றால் தங்களுக்கு பிறகு முதல்மனிதனாக படைக்கப்பட்ட சிவனை கடவுள் தனக்கு இணையாக்கி தனக்குள்ள எல்லா மரியாதையையும் வழங்கும்படி சொன்னாரே அதாவது சிவனுக்கு அதிதேவர் அந்தஸ்து கொடுத்ததை ஏற்றுக்கொள்ளாமலேயே அவர்கள் அசுரர்கள் ஆனார்கள்

குரான் 7:11. நிச்சயமாக நாமே உங்களைப் படைத்தோம்; பின்பு உங்களுக்கு உருக்கொடுத்தோம். அதன்பின், “ஆதமுக்கு ஸுஜுது

செய்யுங்கள் (சிரம் பணியுங்கள்)” என்று மலக்குகளிடம் கூறினோம்; இப்லீஸைத் தவிர (மற்ற மலக்குகள்) யாவரும் (அவருக்குத்) தலைவணக்கம் செய்தார்கள்; அவன் (மட்டும்) தலைவணக்கம் செய்தவர்களில் ஒருவனாக இருக்கவில்லை.

7:12. “நான் உனக்குக் கட்டளையிட்ட போது, நீ ஸஜ்தா செய்யாதிருக்க உன்னைத் தடுத்தது யாது?” என்று அல்லாஹ் கேட்டான்; “நான் அவரை (ஆதமை)விட மேலானவன் - என்னை நீ நெருப்பினால் படைத்தாய், அவரை களிமண்ணால் படைத்தாய்” என்று (இப்லீஸ் பதில்) கூறினான்

7:13. “பரத்திலிருந்து நீ இறங்கி விடு; நீ
பெருமை கொள்வதற்கு இங்கு
இடமில்லை; ஆதலால் (இங்கிருந்து)
நீ வெளியேறு - நிச்சயமாக நீ
சிறுமை அடைந்தோரில் ஒருவனாகி
விட்டாய்” என்று அல்லாஹ்
கூறினான்.

7:14. “(இறந்தவர்) எழுப்பப்படும் நாள்
வரை எனக்கு அவகாசம்
கொடுப்பாயாக” என அவன் (இப்லீஸ்)
வேண்டினான்.

7:15. (அதற்கு அல்லாஹ்) “நிச்சயமாக
நீ அவகாசம் கொடுக்கப்பட்டவர்களில்
ஒருவனாவாய்” என்று கூறினான்.

7:16. (அதற்கு இப்லீஸ்) “நீ என்னை
வழி கெட்டவனாக (வெளியேற்றி)
விட்டதன் காரணத்தால், (ஆதமுடைய

சந்ததியரான) அவர்கள் உன்னுடைய நேரான பாதையில் (செல்லாது தடுப்பதற்காக அவ்வழியில்) உட்கார்ந்து கொள்வேன்” என்று கூறினான்.

7:17. “பின் நிச்சயமாக நான் அவர்கள் முன்னும், அவர்கள் பின்னும், அவர்கள் வலப்பக்கத்திலும், அவர்கள் இடப்பக்கத்திலும் வந்து (அவர்களை வழி கெடுத்துக்) கொண்டிருப்பேன்; ஆதலால் நீ அவர்களில் பெரும்பாலோரை (உனக்கு) நன்றி செலுத்துவோர்களாகக் காண மாட்டாய்” (என்றும் கூறினான்).

7:18. அதற்கு இறைவன், “நீ நிந்திக்கப்பட்டவனாகவும், வெருட்டப்பட்டவனாகவும் இங்கிருந்து

வெளியேறி விடு - அவர்களில் உன்னைப் பின்பற்றுவோரையும், உங்கள் யாவரையும் கொண்டு நிச்சயமாக நரகத்தை நிரப்புவேன்" என்று கூறினான்.

சிவனுக்கு முன்பே இருந்த அதிதேவர்களான நாராயணன் ஆதிசேஷன் நாராயணி ஆகியோரை அசுரர்கள் எதிர்ப்பதில்லை . ஆனால் சிவனை அவர்கள் அங்கீகரிப்பதில்லை

கூடாரை அதாவது சிவனோடு கூடாத அசுரர்களை வென்று சீர் படுத்தும் கோவிந்தா என்பதுதான் அக்காவின் வார்த்தை

இது வீரபாண்டி மாரியம்மன் கோவில் சுயம்பு. இங்கு சிவலிங்கத்தை மறைத்துக்கொண்டு கருப்புசாமி அம்மனுக்கு காவல் தெய்வமாக நிற்கிறார்

எல்லோரும் கருப்பசாமியை வழிபாடுகிறார்கள் பின்னால் இருக்கும் லிங்கத்தை கவனிப்பதில்லை

மிகவும் புகழ் பெற்ற புரதான கோவில் இது .மிகுந்த சக்தி கொண்ட அம்மன் என்பது பலமுறை நிரூபிக்கப்பட்ட கோவில்

இங்கு லிங்கத்தை மறைத்துக்கொண்டு நிற்கும் கருப்புசாமிக்கு வழிபாடு நடக்கிறது

நான் பலமுறை இக்கோவிலுக்கு சென்றிருக்கிறேன்

இங்கு லிங்கம் இருப்பதை கவனித்ததில்லை

அம்மன் கோவில்களில் மட்டுமே கோவிலுக்கு வெளியே கருப்புசாமி என்கிற காவல்தெய்வம் இருக்கும்

சிவன் கோவிலிலோ பெருமாள் கோவிலிலோ முருகன் கோவிலிலோ கருப்புசாமி காவல் தெய்வமாக இருக்காது

ஆகம வழிபாடு உள்ள அம்மன்கோவில்களிலும் வெளியே உள்ள கருப்புசாமிக்கு சைவப்பலியாக பூசணியை உடைக்கிறார்கள்

ஆனால் கிராமகோவில்களில் கருப்புசாமிக்கு ஆட்டை கோழியை பலிசெலுத்தி அதை உண்டுவிட்டு கோவிலுக்குள் வருவதால் கோவில் அசுயை படுகிறது என்கிற கருத்து பரவலாகி வருகிறது

ஆகவே இப்போது அம்மனை வழிபட்டுவிட்டு பிறகு கறியை சாப்பிட்டுவிட்டு கோவிலுக்குள் வராமல் வீடு சென்றுவிடுங்கள் என்று சொல்லத்தொடங்கி விட்டார்கள் எங்கள் கோவிலில் எழுதியே போட்டுவிட்டோம்

எல்லா தெய்வங்களுக்கும் பூஜை

செய்வார்கள் ஆனால்
பலிகொடுக்கமாட்டார்கள்

ஆனால்கருப்புசாமிக்கு பலிகொடுப்பார்கள் அது ஏனென்றால் அவன்கெட்டவன் ஆனால் அம்மாவிடம் மட்டும் அவன்காவல்காரனாக அடங்கி நிற்கிறான் அவனை சாந்தப்படுத்த பலிகொடுக்கிறோம் என்பார்கள்

இந்த கருப்புசாமி என்பவர் அசுர சக்தியாகும் இவர்கள் சிவனை ஓரங்கட்டிவிட்டு தங்களை அம்மனை காவல்காக்கிரவர்கள் போல காட்டிக்கொண்டுள்ளனர்

அசுரர்களின் குரு சுக்ராச்சாரியார் வெள்ளி கிரகம் இந்த கிரகத்தின் அதிதேவதை நாராயணி

பரலோகத்தில் நாராயணனோ சிவனோ முருகனோ அசுரர்களை ஒடுக்குகிறவர்கள் என்றால் அவர்களை தனது தாய்மையால் கொஞ்சம் ஆதரிக்கிறவள் நாராயணி

அதனால்தான் அசுர சக்திகள் அம்மன் கோவிலில் மட்டும் காவல்காரன் என்கிற போர்வையில் வந்து நிற்கிறார்கள்

இந்த அசுரர்கள் மனித குலத்தை இச்சைகள் ஆணவங்கள் அக்கிரமங்களை தூண்டி ஒருவர்க்கொருவர் கெடுதல்கள் பாவம்செய்ய வைக்கிறவர்கள் ஆதலால் இந்த அசுரர்கள் செய்கிற பாவத்தை மன்னிக்கும்படியாக அவர்களை நல்வழிப்படுத்தும்படியாக இறைவனிடம் பூசணியை உடைத்தும் எலுமிச்சையை அறுத்தும் பலி செலுத்தும் வழக்கம் ஆதியில் இருந்தது . அதை காலப்போக்கில் கருப்புசாமியை ஆடுகோழிசெலுத்தி வழிபடுவதாக மனிதர்கள் மாற்றிக்கொண்டு தங்கள் வயிறை நிரப்புவதாக மாற்றிக்கொண்டனர்

சிறுதெய்வ வழிபாடு செய்யாதே எனவள்ளலார் அறிவுறுத்தியதன் பின்னணி இதுவே

சிறுதெய்வங்களை வழிபடக்கூடாது மாறாக அவர்களை மன்னிக்கும்படியாக இறைவனிடம் சைவப்பலியை சமாதான பலியாக செலுத்தவேண்டும்

யுக முடிவு காலம் வரை அசுரர்கள் அனைவரையும் நல்வழிப்படுத்த இயலாது . ஏனென்றால் கலியுகத்தின் இயக்கமே அசுரர்களின் செயல்பாட்டால் வருகிறது . தீமை நன்மை இருந்தால் மட்டுமே இயக்கம் இருக்கும்

ஆகவே அன்னை நாராயணி அசுரர்களையும் தாங்குகிரவளாகவே இருக்கிறாள் . இந்த மென்மையை அசுரர்களும் பயன்படுத்தி அன்னையை காளி என்ற தீய சக்தியாகவே மாற்றியும் வைத்திருக்கிறார்கள்

இச்சைகள் ஆக்ரோஷம் போன்ற ரஜோகுணம் உலகம் இயங்குவதற்கு ஓரளவு உதவியும் செய்கிறது . ஆனால் அளவுக்கதிகமாகி பாவங்கள் துன்பங்கள் வரவும் காரணமாகி விடுகிறது

காளியை மாகாமாயை என்றும் சொல்வார்கள் . இந்த காளி வழிபடுவோர் பலர் தீமைகள் செய்கிறவர்களாகவே இருக்கிறார்கள் மந்திரவாதிகள் தங்கள் ஏவல் பில்லி சூனியங்களுக்கு இவளை பயன்படுத்துகிறார்கள்

இவள் உலகத்தை விருத்தியாக்குகிறாள் அப்படி இப்படி பாவத்தில் வீழ்த்துவதும் இவளே அந்த பாவத்திலிருந்து வெளியேற்றி விடுவதும் இவளே என்றும் சொல்வார்கள் அது எவ்வளவு உண்மையோ அதை விட உண்மை நாராயணி அசுரர்களுக்கு இடம் கொடுத்தவளாக சிவனை மிதிக்கிறாள் என்பதாகும் . காளி என்ற மாயாசக்தியாக அவள் எப்போதும் சிவனை மிதிப்பதாகத்தான் ஞானிகள் சித்தரித்துள்ளனர்

அசுரர்களின் ரகசியம் அவர்கள் சிவனை வெறுத்து சிவனுக்கு மாற்று சக்தியாக தங்களை காட்டிக்கொள்வதில் இருக்கிறது

. சிவனைப்போன்ற மனிதர்களை இச்சை ரஜோகுணத்தில் இழுத்து விட்டு அவர்களை மிதித்து அழுத்த தயாராக உள்ளதில் உள்ளது

சமரச வேதாந்தியான அன்னை நாராயணியிடம் அசுரர்கள் சிவனை அதிதேவராக ஏற்றுக்கொள்ள வழிகாட்டுவாயாக என்ற வேண்டுதலை ஏறேடுத்தால் அசுரர்கள் நல் இணக்கமாகி நல்ல சக்தியாகும் மாறுவார்கள் .

காளி பாவத்தை பரிகரிக்கிரவளாக மாறுவாள் . அந்த நிலையை பவதாரிணி என்பார்கள் . பவதாரிணியாக மகாகுரு ராமகிருஷ்ண பரமஹம்சர் காளியை வழிபட்டார் . பவதாரிணி சிவனை மிதிக்கமாட்டாள் மாறாக சிவனை அபிஷேகித்து வழிபடுவாள் .

காளி சிவனை மிதித்தால் அவள் துர்த்தேவதை ; ஆனால் சிவனை வழிபட்டால் ராஜாகாளி பவதாரிணி சாந்த

சொருபிணி நல்சக்தியாக மாறிவிடுகிறாள் . இப்போது அவள் சிவகாமி .

அன்னை நாராயணியை உணரத்தொடங்கியவுடன் எனது செயல்பாடுகள் யாவும் முடங்கத்தொடங்கின . பிரச்சினைகள் மேல் பிரச்சினைகள் வந்து குவிந்துவிட்டன . விட்டுவிடலாமா என்கிற அளவுக்கு வந்துவிட்டது

பிற்பாடுதான் கடவுள் இந்த கருப்புசாமிக்காக சைவப்பலி செலுத்தி அவர்கள் சிவனை அதிதேவராக ஏற்றுக்கொள்ளும் மனநிலை உண்டாகட்டும் என்று வேண்டுதல் செய்ய வழிகாட்டினார் . கட்டுகள் விலகத்தொடங்கின .

சிவகாமியிடமும் தாங்களே சிவனை நேசித்திருக்க தங்களால் பாதுகாக்கப்படும் அசுரர்களும் சிவனை ஏற்றுக்கொள்ளும் பக்குவத்தை உண்டாக்குவீராக என்று மன்றாடுவது அவசியமாகும்

இதுவே சமரச வேதத்தின் ஒரு வெளிப்பாடுமாகும் . சமாதானம் தழைத்து அசுரர்களும் தேவர்களாக மாறும் வழி பிரார்த்தனை இதுவே

இப்பிரார்த்தனையே கலியுகம் முடிந்து சத்திய யுகம் தோன்றுவதற்கு திறவுகோலுமாகும்

அசுரர்களும் தேவர்களும் கூடி இருந்து குளிர்வார்கள்

நாராயணனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ நாராயணனாய

ஆதிசேஷனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ ஆதிசேஷாய

நாராயணியாக வெளிப்பட்ட ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்
ஓம் நமோ நாராயணியாய

சிவனாக வெளிப்பட்ட ஓரிறைவனையே நமஸ்கரிக்கிறோம்

ஓம் நமோ சிவாய

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

## திருப்பாவை 28

கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து உண்போம்
அறிவு ஒன்றும் இல்லாத ஆய்க் குலத்து உந்தன்னைப்
பிறவி பெறுந்தனைப் புண்ணியம் யாம் உடையோம் குறை ஒன்றும் இல்லாத
கோவிந்தா உந்தன்னோடு
உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உந்தன்னை
சிறு பேர் அழைத்தனமும் சீறி அருளாதே
இறைவா நீ தாராய் பறையேலோர் எம்பாவாய்

ஆடுமாடுகள் பால் கொடுப்பதால் அவைகளுக்கு பெயர் கறவைகள்

கறவைகளை காமதேனு என்பார்கள்

அக்காலத்தில் மிக சிறந்த தொழில்களில் ஆடுமாடு மேய்த்தல் ஒன்று

ஆயர் குலம் என்பது இன்று பல ஜாதிகளிலும்

விரவி கிடக்கிறது

அவர்கள் மேய்ச்சலுக்கு செல்லும்போது ; சாப்பாடும் கொண்டுபோய் விடுவார்கள்

காட்டுச்சாப்பாடு ; கட்டுச்சாப்பாடு நல்ல உரம்

ஆகவே ஆட்டம் பாட்டமுமாகவே இருக்கும்

அவர்கள் மெட்டுக்கட்டி பாடுவதையே கானம் சேர்த்து உண்போம் என்கிறாள் அக்கா

ஆயர் குலத்துக்கே இயல்பான ஆட்டம் பாட்டத்திற்கு பறை என்ற தப்பு ஆதாரமானது

மாலை வேளைகளில் ; வயல்களில் அறுவடை காலத்தில் அங்கு மேய்ச்சலுக்கு வரும் ஆயர்கள் பறை அடித்து ஆடி மகிழ்விப்பார்களாம்

அவர்களுக்கு அந்த பறை நிறையும்படியாக நெல்லை ; தானியங்களை பரிசளிப்பார்களாம்

பறை என்ற வார்த்தைக்கு பரிசு என்பதும் அர்த்தம்

தப்பு இசையை எழுப்பும் ; அது நிறைய பரிசையும் வேளாளர்கள் கொடுப்பார்கள்

கோதை அக்கா திருப்பாவை முழுவதும் திரும்ப திரும்ப பறை என்ற வார்த்தையை இறைவனிடம் பெறும் அருளாக ; பொருளாகவே பயன்படுத்தியுள்ளார்

பெரியாழ்வார் கண்டு எடுத்த பெண் பிள்ளை வாழியே என உலகம் அவளை கொண்டாடினாலும் ; அவள் ஆயர் குலத்து பெருமைகளையே பேசிக்கொண்டிருப்பாள்

இதன் தாத்பர்யம் ஏதென்றால் மனிதர்களாகிய நாம் அனைவருமே இறை பேரரசில் வளர்க்கப்படும் கறவைகளே

ஆத்மாக்கள் அனைத்தும் பசுக்களே

நாம் அவரை இன்னாரென்று அறியாதபோதும் நம்மை அவர் அறிந்தே இருக்கிறார்

பிறவிகள் தோறும் பரமாத்மாவானவர் குருவாக ; ஆயனாக நம்மை

வழிநடத்திக்கொண்டுதானே உள்ளார்

நாராயணன் இயேசுவாக வெளிநாட்டு மக்களை நல்வழிப்படுத்த வந்தபோது தன்னை நல்ல ஆயன் என பாரா பாராவாக விளக்கம் கொடுத்துள்ளார்

1. மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஆட்டுத்தொழுவத்துக்குள் வாசல்வழியாய் பிரவேசியாமல், வேறுவழியாய் ஏறுகிறவன் கள்ளனும் கொள்ளைக்காரனுமாயிருக்கிறான்.

2. வாசல்வழியாய்ப் பிரவேசிக்கிறவனோ ஆடுகளின் மேய்ப்பனாயிருக்கிறான்.

3. வாசலைக் காக்கிறவன் அவனுக்குத் திறக்கிறான்; ஆடுகளும் அவன் சத்தத்துக்குச் செவிகொடுக்கிறது. அவன் தன்னுடைய ஆடுகளைப் பேர்சொல்லிக் கூப்பிட்டு, அவைகளை வெளியே நடத்திக்கொண்டுபோகிறான்.

4. அவன் தன்னுடைய ஆடுகளை வெளியே விட்டபின்பு, அவைகளுக்கு முன்பாக

நடந்துபோகிறான், ஆடுகள் அவன் சத்தத்தை அறிந்திருக்கிறபடியினால் அவனுக்குப் பின்செல்லுகிறது.

5. அந்நியருடைய சத்தத்தை அறியாதபடியினால் அவைகள் அந்நியனுக்குப் பின்செல்லாமல், அவனை விட்டோடிப்போம் என்றார்.

6. இந்த உவமையை இயேசு அவர்களுடனே சொன்னார்; அவர்களோ அவர் சொன்னவைகளின் கருத்தை அறியவில்லை.

7. ஆதலால் இயேசு மறுபடியும் அவர்களை நோக்கி: நானே ஆடுகளுக்கு வாசல் என்று மெய்யாகவே மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

8. எனக்கு முன்னே வந்தவர்களெல்லாரும் கள்ளரும் கொள்ளைக்காரருமாயிருக்கிறார்கள்; ஆடுகள் அவர்களுக்குச் செவிகொடுக்கவில்லை.

9. நானே வாசல், என் வழியாய் ஒருவன்

உட்பிரவேசித்தால், அவன் இரட்சிக்கப்படுவான், அவன் உள்ளும் புறம்பும்சென்று, மேய்ச்சலைக் கண்டடைவான்.

10. திருடன் திருடவும் கொல்லவும் அழிக்கவும் வருகிறானேயன்றி வேறொன்றுக்கும் வரான். நானோ அவைகளுக்கு ஜீவன் உண்டாயிருக்கவும், அது பரிபூரணப்படவும் வந்தேன்.

11. நானே நல்ல மேய்ப்பன்: நல்லமேய்ப்பன் ஆடுகளுக்குக்காகத் தன் ஜீவனைக் கொடுக்கிறான்.

ஆயன் ; மேய்ப்பன் ; குரு எல்லாமே ஒரே அர்த்தம் உள்ளவை

மண்ணிலிருந்து உண்டாகிற குருமார்கள் பலர் ; தங்கள் நிறுவனங்களை வளர்க்க பலரை அட்டையாக சுரண்டி விடுகிறார்கள்

ஆனால் பரத்திலிருந்து பூமிக்கு வருகிற சற்குருநாதர்கள் வாழ்கிற காலத்தில் பூமியில் பிறந்திருப்போர் பேறு பெற்றோர்களே

ராமர் ; கிறிஷ்ணர் ; இயேசுவின் காலத்தில் அவரோடு வாழ்ந்து அவருடன் தொண்டூழியம் செய்தோர் பேறு பெற்றோர்களே

வரப்போகிற சத்திய யுகத்தை மலர செய்கிற பணி இவர்களிடமே உள்ளது

வரவேண்டிய சமரச வேதாந்தி இறைவனின் அபிஷேகத்தோடு வெளிப்படும் காலத்தில் இவர்கள் அனைவரும் ஒன்றிணைவார்கள்

அப்படி யுகம் யுகமாக ராமர் ; கிறிஷ்ணர் ; இயேசுவின் காலத்தில் அவருடன் தொண்டூழியம் செய்தோர் பலர் பிறந்திருப்பதை காண்கிறேன்

ஆகவே வரவேண்டியவரை வரவேற்கும் பிரார்த்தனைக்கு முக்கியத்துவம் கொடுங்கள் என்கிறேன்
குறை ஒன்றும் இல்லாத கோவிந்தா
உந்தன்னோடுபிறவி பெறுந்தனைப்
புண்ணியம் யாம் உடையோம்அன்பினால் உந்தன்னை
சிறு பேர் அழைத்தனமும் சீறி அருளாதே

# கண்ணா என்று அவரை சிறுபேர் அழைத்து இந்தியாவே கொண்டாடி மகிழ்கிறது

கீதை 11 : 14 விதிர்விதிர்த்து நிலைதடுமாறி மயிர்க்கால்கள் கூச்செரிந்தும் வியப்புமேலிட்டவனாய் அர்ச்சுணன் இரு கைகளையும் கூப்பியவனாக தலைசாய்த்து வணங்கி கடவுளின் உன்னதமான வெளிப்பாடாகிய கிரிஸ்ணரை துதிக்கதொடங்கினான் !

கீதை 11 : 15 எனதருமை கிரிஸ்ணா ! சற்குருவே ! அனைத்து தேவதூதர்களையும் அனைத்து படைப்பினங்களையும் ஒன்று சேர உம் சரீரத்தில் காண்கிறேன் ! படைப்பு தொழிலுக்கு நியமிக்கபட்ட பிரம்மாவை தாமரையில் அமர்ந்திருப்பவராகவும் ; அதுபோல ருத்திரர் சிவனையும் ; இன்னும் மகா முணிவர்களையும் சாதுக்களையும் அசுரர்களையும் தெய்வீக சர்ப்பங்களையும் காண்கிறேன் !

கீதை 11 : 16 அண்டபகிரண்டங்களின் தலைவனே ! உமது பரமாத்ம சொரூபத்தில் பலபல கைகளையும் தோள்களையும் வாய்களையும் கண்களையும் எல்லையே இல்லாமல் பரந்து பரந்து எங்கெங்கும் விரிந்துகொண்டே இருப்பதாக காண்கிறேன் ! உம்மிடத்தில் முடிவையோ நடுவையோ துவக்கத்தையோ என்னால் காண முடியவில்லை !

கீதை 11 : 17 இந்த பரமாத்ம சொரூபம் அதன் ஒளிவெள்ள பிரகாசத்தால் காண்பதற்கு கடிணமானதாக இருக்கிறது !வெடித்து சிதறுகிற தீப்பிழம்புகளால் எண்திசையிலும் பரவி நிறைவதாகவும் அளவிடமுடியாத சூரியக்கதிர்வீச்சு போலவும் நான் காண்கிறேன் அத்தோடு பலவகையான மகுடங்களையும் ஆரங்களையும் பதக்கங்களையும்

அணிந்துள்ளதாகம் மகிமையைக்காண்கிறேன் !

கீதை 11 : 18 நீரே உன்னதமும் மூலப்பொருளுமாகிய பிரதான பௌதீகம் ! இந்தப்பேரண்டம் முழுமையும் முடிவாக மறையும் இடம் நீரே ! நீரே ஆதியானவர் ! நீரே அழிவில்லாதவர் ! நீரே தெய்வீக சம்பத்துகள் பௌதீக சம்பத்துகள் யாவற்றையும் நிர்வகிக்கிறவர் ! நீரே கடவுளின் அதி உயர்ந்த வெளிப்பாடாகவும் இருக்கிறவர் !

கீதை 11 : 19 ஆதியும் அந்தமும் நடுவும் இல்லாதவர் நீரே ! உமது மகிமை எல்லையற்றதாக விரிந்துகொண்டே இருப்பது ! எண்ணிறந்த கைகளையும் சந்திர சூரிய நட்சத்திரங்களை ஒத்த கண்களையும் உடையவர் நீரே ! உமது வாயிலிருந்து ஜுவாலிக்கிற அக்கிணி புறப்படுவதையும் உமது கதிர்வீச்சுக்களால் பேரண்டம் முழுவதும் தகித்து எரிவதாகவும் காண்கிறேன் !

கீதை 11 : 20 நீர் ஒருவரே வானங்கள் நட்சத்திர மண்டலங்கள் அனைத்திலும் அவற்றுக்கு ஊடாகவும் விரவியிருப்பவராக காண்கிறேன் ! உன்னதமானவரே ! ஆச்சரயமான படுபயங்கரமுமான இந்த பரமாத்ம சொரூபத்தை காணும்போது எல்லா நட்சத்திர மண்டலங்களும் தூசியைப்போல ஆகிவிட்டன !

கீதை 11 : 38 நீரே ஆதிதேவர் ! ஆதிபுருஷர் ! பழமையானவரும் கடவுளால் படைக்கப்பட்ட அனைத்தின் இறுதி அடைக்கலமுமானவரும் நீரே ! அனைத்தையும் அறிந்தவரும் அனைவராலும் அறியப்படவேண்டிய இலக்கும் நீரே ! பரமான புகலிடமும் நீரே ! எல்லையற்ற ரூபமானவரும் பிரபஞ்ச தோற்றம் முழுவதிலும் பரவியுள்ளவரும் நீரே !

கீதை 11 : 39 நீரே வாயு ! நீரே எமன் ! நீரே அக்னி ! நீரே
வருணன் ! நீரே சந்திரன் ! நீரே மனுக்குலத்தின் உடையவர் !
ஆதிமூலத்தின் குமாரனும் நீரே ! எனது மரியாதை கலந்த
வணக்கங்களை ஆயிரமாயிரம் முறைகள் சமர்பிக்கிறேன் !!

கீதை 11 : 40 முன்னிருந்தும் பின்னிருந்தும்
எல்லாத்திக்குகளிலிருந்தும் உம்மை வணங்குகிறேன் !
எல்லையற்ற சக்தியும் எல்லையற்ற ஆற்றலும் நீரே ! நீரே
எங்கும் பரவி நிறைகின்றீர் !!

கீதை 11 : 41 உம்மை நண்பன் என எண்ணிக்கொண்டு
கிரிஸ்ணா யாதவா நண்பனே என்றெல்லாம் அகந்தையுடன்
அழைத்துள்ளேன் ! உம்மை ஆழமாக உணராமல்
பித்தத்தினாலும் பிரேமையினாலும் புத்திக்குறைவாலும் நான்
செய்தவை அனைத்தையும் பொருத்தருள்வீராக !

கீதை 11 : 42 பொழுதுபோக்கின்போதும் ; உணவருந்தும்போதும்
; ஒரே படுக்கையில் படுத்திருந்தபோதும் நண்பர்களுக்கு
மத்தியிலும் தனியாகவும் கூட கிண்டலும் கேலியும்
செய்துள்ளேன் ! இழிவுகளை கடந்தவரே ! இத்தகைய
குற்றங்களையும் மன்னிப்பீராக !!

நண்பனும் சீடனுமான அர்ச்சுணனே விஷ்வருபத்தை
தரிசித்து விட்டு தாழ விழுந்து இத்தகைய வார்த்தைகளை
சொன்னார்

கோதை அக்காவும் அதே போலவே வேண்டுகிறார் : சிறுபேர்
அழைத்தோம் சீறி அருளாதே

**திருப்பாவை 29**

சிற்றம் சிறு காலே வந்து உன்னை
சேவித்து உன் பொற்றாமரை அடியே
போற்றும் பொருள் கேளாய்
பெற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில்
பிறந்து நீ குற்று ஏவல் எங்களைக்
கொள்ளாமல் போகாது
இற்றைப் பறை கொள்வான் அன்று காண்
கோவிந்தா எற்றைக்கும் ஏழ் ஏழ்
பிறவிக்கும் உன் தன்னோடு
உற்றோமே ஆவோம் உனக்கே நாம்
ஆட்செய்வோம் மற்றை நம் காமங்கள்
மாற்றேலோர் எம்பாவாய்

29

தமிழ் ஆன்மீக செறிவுள்ள மொழி .
வள்ளலார் கூட தமிழ் ஆத்மாவை எளிதில்
இறைவனுடன் ஐக்கியம் ஏற்படுத்தும் .
சமஸ்கிரதம் தாய் மொழி என்றால் தந்தை
மொழி தமிழ் என்றுள்ளார்

தமிழ்வார்த்தைகள் ; அதை யார் உச்சரித்தாரோ அவருக்கும் இறைவனுக்கும் உள்ள அருள் தொடர்பை அதிர்வை அப்படியே இழுத்து வைத்துக்கொள்ளும் .

ஞானிகள் பக்தி சுவை உணர்வு சொட்ட பாடிய தேவாரம் , திருவாசகம் , திருப்பாவை , திருவெம்பாவை , திருப்புகழ் , கந்தரலங்காரம் , கந்தர் அநுபூதி , கந்தர்கோட்ட மணிமாலை , திருவருட்பா போன்ற உயர் ஞானிகள் எழுதிய பாடல் வரிகளை இசையோடு கேட்க பழகவேண்டும் . இவை புரிந்து கொள்ள சற்று கடினமாக தோன்றினாலும் கேட்க கேட்க அந்த அருளதிர்வுகள் உணர்வுகள் மெல்ல நம் உடலில் தங்கி மனதில் புகுந்து அதை ஆக்ரமிக்க தொடங்கும் . மெதுவாக உள்ளிருந்து நற்குணமாக வெளிவரும்

தமிழில் உள்ள அளவு பலதரப்பட்ட உணர்வுகளுக்கு ; இயல்புகளுக்கும் – தமோ ; ரஜோ ; சத்வ குணத்தாரையும் ஈர்க்கும் பாடல்களை மற்ற மொழிகளில் கேட்க இயலாது

ரஜோகுணம் மிகுந்த கருப்பசாமி பாடல்களும் கூட அப்படிப்பட்டவர்களை ஈர்த்து பக்தியை வளர்க்கிறது . வாடா கருப்பா போடா கருப்பா என்றால்தான் அவர்களுக்கு கொஞ்சம் பக்தி வரும் . எந்த தரத்திற்கும் இறங்கி வரும் தேவர்களின் வியாபகங்கள் தமிழில் மட்டுமே உண்டு

புற்றீசல் போல ஐயப்ப சீஷன் பாடல்களும் சினிமாக்களும் தமிழைப்போல எங்கும் இல்லை .

சிறு தொழில் செய்யும் ஏழைகள் அன்றாடம் வயிற்றுப்பாடு ; உடல்நோவு தீர குடித்தல் அடித்தல் உதைத்தல் காணா பாட்டுப்பாடி சோகத்தில் சுகம் காணுதல் ; தத்துவம் போல உளறுதல் ; இடுப்பு வலி சுளுக்கு டாண்ஸ் ஆடி அடுத்தவரை வெறுப்பேற்றுதல் போன்றவை அவர்களின் வாழ்நிலையில் தவிர்க்க இயலாதவை .

இப்படிப்பட்டவர்களுக்கு ஐயப்ப சீஷன் பொற்காலம் போல . அந்த குறைந்த கால கடும் விரதம் உடலை தேற்றும் ; காசை

மிச்சமாக்கும் . செய்முறையில் வருவது மட்டுமே அந்த வருடத்திற்கு அவர்களுக்கு கிடைக்கும் மிச்சம் ; அப்படியே குடும்ப முன்னேற்றத்திற்கு போய் விடும் .

சினிமா கனவில் வெற்றி காணமுடியாமல் குழு ஆட்டம் ; சண்டை வீரர்களாக பலவேளைகளில் வாயிற்று பிழைப்பிற்காக தரம் தாழ்ந்த வாழ்க்கையில் வாழும் பலரும் உதவி இயக்குனர் தயாரிப்பு பணியாளர்கள் அனைவரும் மாலை போட்டு புற்றீசல் போல ஐயப்ப சீஷன் படங்களால் நன்மை அடைகிறார்கள் .

கிறிஸ்த வட்டாரத்தில் கூட தமிழ் பாதிரிகளைப்போல வித விதமாக சீ.டி போடுபவர்கள் வெளிநாட்டிலும் கூட இல்லை . பாடத்தெரிந்தால் பாஸ்ட்டர் ; ஆடத்தெரிந்தால் அபிஷேகம் உள்ள பெரிய ஊழியக்காரன் என்று ஆளாளுக்கு 100 பேரை பிடித்து வைத்துக்கொண்டு ஜோராக பிழைப்பவர்கள் தமிழர்களே . உலகளவில் கிறிஸ்த ஊழியம் செய்து கோடிக்கணக்கில்

பணம் புரளுவது ஒரு தமிழர்

இதன் பின்னணி தமிழில் உள்ள இயல் ; இசை ; நாடகப்பின்னணி . முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போம் என்று கந்தரலங்கார பாடல் வரி சால உண்மையானது

இறைதொடர்பு கூட கூட தமிழில் வார்த்தை வளம் அதிகரிக்கும் . அந்த வார்த்தை கேட்கப்பட்டாலும் படிக்கப்பட்டாலும் நம் ஆத்மாவில் அருள் கூடும்

அவ்வகையில் அருள் தமிழ் வார்த்தை வளம் ; கவிநயம் ; எதுகை மோனையுடன் கூடிய பொருள் சுவை நமக்குள் வளரவேண்டுமானால் ஆண்டாளின் திருப்பாவை முதலிடம் .

திருப்பாவை 29 அப்படி ஆழ்ந்து ரசிக்கப்படவேண்டிய ஒன்று

நேரடி விண்ணப்பம் இப்பாடலில் மட்டுமே உள்ளது . தன்னை ஏற்றுக்கொள்வானா

மாட்டானா என ஆசைப்படும் ஒரு பெண் எவ்வளவு நேர்த்தியாக ; தாழ்மையோடு வின்னப்பிக்கிறாள் பாருங்கள் ;

சிற்றம் சிறுகாலே ; பொற்றாமரை அடி

பிரம்மமுகூர்த்தம் என்பது மட்டுமல்ல அதன் பொருள் ; முதல்மரியாதை துயில் எழுந்தவுடன் உனக்குத்தான் . பொற்றாமரை அடியை நான் போற்றுகிறேன் அதுமட்டுமே எனது வேலை ; சலசலவென பேசி உன்னை வெறுப்பேத்தமாட்டேன் ; ஏன் என்று நீதான் கேட்டுக்கொள்ள வேண்டும் . அப்படி கேட்டால் ஒரு ஒரு வார்த்தை பேசிக்கொள்கிறேன்

பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில் பிறந்தவன் நீ . பாலூட்டி என்ற வகை உயிரினத்தை பெற்றம் – எவ்வளவு அழகான வார்த்தை

பாலூட்டிகள் தன் வயிற்றில் கருவை சுமந்து ; பெற்ற பிறகு எனக்கென்ன என இருந்து விடாது . குட்டிகள் ஆளாகி சொந்தக்காலில் நிற்கும் வரை வளர்த்து

காக்கும் . தன் குட்டிகள் எவ்வளவு குற்றம் செய்தாலும் தாங்கி திருத்தி பக்குவம் கொடுக்கும் .

பிள்ளை மனம் கல்லாக இருந்தாலும் பெற்ற மனம் பித்தாக இருக்கும் . பிள்ளை பள்ளத்தில் போய் விழுவேன் என மாயையில் அறிவிழந்து போகாத போகாத என கெஞ்சும் பெற்றோர்களை எட்டி உதைக்கும் . போய் விழுந்தால் தாய்க்கா நோவு ? விடு கழுத போகட்டும் என்று பெற்றோர்கள் இருந்து விடுகிறார்களா ?

பாலூட்டும் மிருகங்களே அப்படிப்பட்டவை என்றால் அதை மேய்க்கும் குலத்தில் பிறந்த நீ எங்களை கைவிட்டு விடுவாயா ?

சற்குரு இயேசுவும் கூட தன்னை நல்ல மேய்ப்பன் என்றுதான் சொன்னார் நல்ல மேய்ப்பன் தன் ஆடுகளுக்காக தன் உயிரையும் கொடுப்பான் என்றார் . காணாமல் போகாத 99 ஆடுகள் பத்திரமாயிருப்பதை கண்டு சந்தோசப்படாமல் காணாமல் போன ஒரே ஒரு ஆட்டின்

நிமித்தமாக கவலைகொண்டு ராப்பகலாக தேடி அலைவான் என்றார் . ஆம் ஆயர் குலத்தோனின் இயல்பு அது . அவன் தனது கிடையின் மீது அவ்வளவு அக்கறை வைத்திருப்பான் . ஆனாலும் சீடன் எப்படி இருக்கவேண்டும் ?

அதிகாரிகளின் கையை பிடித்து கையெழுத்து போட வைக்கிரவனே சிறந்த நிர்வாகி . அதிகாரியிடம் போய் அதைச்செய் இதைசெய் என்று கேட்டால் ; ம் அப்படியா நான் செய்யமாட்டேன் போ என விரட்டி விடுவார் . அவரது அறிவு தெளிவால் அவர் கண்டுபிடித்து அவர் செய்யச்சொன்னதுபோல சூழ்நிலையை நாம் உருவாக்க வேண்டும் . இதற்கு நாம் பேசும் வார்த்தைகளும் அணுகுமுறையும் மிகவும் முக்கியம் .

ஆண்டாளின் வார்த்தைகளில் அதிகாரியிடம் காட்டுகிற அணுகுமுறை இருக்கிறது . தலை சிறந்த குருபக்தி ஆத்மாவின் முன்னேற்றத்தை உறுதிப்படுத்தும் . குருவிடம் இருக்கும்வரை

அடிமையைப்போலத்தான் இருக்கவேண்டும் , கெட்ட குருமார்களிடம் கூடவா என்று கேள்வி கேட்குமளவு பல நிகழ்வுகள் தற்போது உள்ளன .

ஆனால் நான் ஒன்றே ஒன்று சொல்வேன் . கடவுளுக்கு கீழ்படிவதாக நினைத்து கெட்ட குருவுக்கும் நாம் சேவை செய்யவேண்டும் . குரு அப்படிப்பட்டவர் ஆகா ஓகோ என குருபெருமை பேசி சேவை செய்தால் அந்த குருவிடம் உள்ள தீய இயல்புக்கும் நாம் கப்பம் கட்டித்தான் ஆகவேண்டும் . மாறாக இறைவனுக்காக குருவிடம் மரியாதை காட்டினால் அவர் கெட்ட குரு என்றால் இறைவன் நம்மை அவரிடமிருந்து கை மாற்றி விட்டுவிடுவார்

இங்கோ பரந்தாமன் ஆண்டாளின் குரு . அவன் கடவுளை அடுத்த நான்கு அதிதேவர்களில் - சற்குருநாதர்களில் ஒருவன் . அதிலும் மூத்தவன் . அவனுக்குள் தான் மற்ற மூவரையும் கடவுள் படைத்துள்ளார் அவன் தவறேதும் இல்லாதவன் . மட்டுமல்ல

மணவாளனும் கூட . அவனை சரணடைந்தே முழுமை அடைந்தாக வேண்டும் .

ஆயினும் நம் குறை அவனுடன் கலக்க விடாது தடுக்குமே . குறைகள் நம்மிடமிருந்து களையப்பட ; பரிசுத்தமடைய உள்ள ஒரு வழி குரு சேவை . குருவால் ஏவல் வேலை வாங்கப்பட்டால் பாவம் பல மடங்கு தீர்ந்து பத்து பிறவிகளை ஒரே பிறவியில் கடந்து விட முடியும் . அதற்கும் கொடுப்பினை வேண்டும் .

கசவனம்பட்டி நிர்வாண சாமியாரை பார்க்க ஒரு கூட்டம் உட்கார்ந்திருக்குமாம் . அவர் வெளியே வந்து அந்தப்பக்கம் நிற்பாராம் . அந்தக்கூட்டம் அப்படியே மாறி நம்மை பார்க்கமாட்டாரா என நிற்கும் . வெயிலில் காய விட்டுவிடுவார் . அவரை ஒரு ஒரு முறை பார்த்தால் வந்த காரியம் நிச்சயம் நிறைவேறுமாம் . அல்லது முன்னேற்றம் கட்டாயம் இருக்குமாம் .

என் குருநாதர்களில் ஒருவரான நாமக்கல் மகான் சட்டம் படித்துவிட்டு தொழிலில்

சோபிக்க முடியாமல் ; இது பாவம் அது பாவம் என்று உலகத்தோடு ஒட்டி வாழமுடியாமல் தகப்பனுக்கு பிரியமற்ற பிள்ளையாக இருந்தாராம் . அப்போது கசவனம்பட்டியாரை கேள்விப்பட்டு அவரைப்பார்க்க போனாராம் . அவருக்கு முன்ஷிப் உத்தியோகம் கிடைத்ததாம் . மாவட்ட நீதிபதியாகி ஓய்வு பெற்றார் .

ஞானிகளுக்கு நாமாக முன்வந்து சிறு சிறு தொண்டூளியம் செய்யவேண்டும் . அதிலும் அவர்கள் ஏதேனும் ஏவல் செய்தால் இறைவனுக்கு செய்வதாக நினைத்து கையால் இட்ட பணியை நாம் தலையால் செய்து முடிக்கவேண்டும் பல பிறவி பாவம் தீர்ந்து விடும் . ஆண்டாளும் ஆயர் குலத்தில் பிறந்தவனே ; எங்களை குற்றேவல் வாங்காமல் இருந்து விடாதே என்கிறார் . உமக்கு அடிமையானோம் உம்மை சரணடைந்தோம் . இன்னைக்கு அல்ல எழேழு பிறவிக்கு பிறகும்கூட பார்த்துக்கொள் ; உனக்கு நல்ல அடிமையா இல்லையா என்பதை .

நான் செய்ய வேண்டியது எதுவோ அந்த எளிய வழியை கண்டுகொண்டேன் ; அதை நான் செய்தும்விடுவேன் ; மற்றபடியாக எனது காம குரோதாதி மாயைகளை மாற்றி என்னை பக்குவப்படுத்துவது ; முழுமைப்படுத்துவது உனது வேலை ; என் வேலை கிடையாது ; என்னாலும் அவ்வளவு லேசாக விடவேண்டியத்தை விட முடியாது ; ஆனாலும் அதை விடவைப்பது சற்குருவே உமது வேலை ; எப்படியாது என்னை முழுமையாக்கி விடுக .

நாராயணன் நாமத்தினாலும் சிவனின் நாமத்தினாலும் சேஷனனின் நாமத்தினாலும் நாராயணியின் நாமத்தினாலும் கடவுள் தங்களையும் தங்கள் குடும்பத்தாரையும் தமது அருளால் நிரப்ப வேண்டுகிறேன்

அருட்பெருஞ்சோதி அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி

**திருப்பாவை 30**

வங்கக் கடல் கடைந்த மாதவனை
கேசவனை
திங்கள் திருமுகத்து சேய் இழையார் சென்று
இறைஞ்சி
அங்கப் பறை கொண்ட ஆற்றை அணி
புதுவைப் பைங்கமலத் தண் தெரியல் பட்டர்
பிரான் கோதை-
சங்கத் தமிழ் மாலை முப்பதும் தப்பாமே
சொன்ன இங்கு இப்பரிசுரைப்பார் ஈரிரண்டு
மால் வரை தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்
எம்பாவாய்.

திரேதா யுகத்தில் சீதையாக அவதரித்த
ஆத்மா – பூமியின் வியாபகம் !!

பூலோகத்தில் அதர்மம் பெருகியபோது அதை
சீர் செய்து மீண்டும் தர்மத்தை நிலைநாட்ட
நாராயணன் ஸ்ரீராமராக அவதரித்த போது

தேவர்கள் வானரர்களாக தமிழகத்தின் சுருளிமலை தொடர்பான மேற்கு தொடர்ச்சி மலையில் அவதரித்தனர்

நாராயணன் பூலோகத்தை நேசித்து அதை சரி செய்ய வந்ததால் பூமியின் வியாபகம் சீதையாக அவதரித்தது அவளே பூமி !

தவங்கள் யோகங்கள் மூலமாக சித்திகளை அடைந்து அசுர ஆவிகளுடன் இணக்கம் வைத்து அவைகளின் உபதேசங்களையும் வழிநடத்துதலையும் பெற்றுக்கொண்டவர்கள் அரக்கர்கள் எனப்பட்டனர் இவர்களின் தலைமையிடமாக ராவனேஸ்வரனின் இலங்கை இருந்தது

இவர்கள் தாங்கள் பெற்ற வரங்களால் தங்களை ஈஸ்வரர்களாக அறிவித்துக்கொண்டனர் பூலோகத்தில் பாவங்கள் அடாவடிகள் அதிகரித்தன பக்தியோகம் பின்னுக்கு தள்ளப்பட்டு சித்துக்களுக்காக யோகசாதனைகள் செய்வது அதிகரித்த போது அதை பரிகரித்து கடவுளை நோக்கிய பக்தியோகத்தை ஸ்தாபிக்கவும் ;

நவீன நாத்திகவாதம் என்ற விசத்தை மறைத்துக்கொண்டு – கடவுள் நம்பிக்கை அற்ற ஆன்மீக மார்க்கங்கள் சித்தம் ; யோகம் ; தவம் ; காயகல்பம் ; உடற்பயிற்சி என்னும் பெயரில் மாயைகள் பரவுவதை வெல்லவும் ; பக்தியோக மார்க்கத்தால் இறைபேரரசை நிறுவவும் பூமிக்கு ஸ்ரீராமர் வந்தார் ! ஏறக்குறைய 3000 ஆண்டுகள் ராமராஜ்ஜியம் தர்மத்தோடு நடந்தது

பாவிகளின் பலனை அவர்களின் சந்ததியினரே அறுப்பார்கள் அல்லது தீர்த்து வைப்பார்கள் என்பது கடவுளின் கணக்கு ! ராவனேஸ்வரனின் கணக்கை தீர்க்க அவனுக்கு மகளாகவே சீதை அவதரித்தார் ராவண சம்காரத்திற்கு காரணமாக இருந்தார்

அத்தோடு பூலோகவாசிகளின் பாவங்களுக்கு பிராயசித்தமாக அப்பிறவியில் இன்னல்களை மட்டுமே அனுபவித்து பூமியின் மடியிலேயே தஞ்சமடைந்தார் – பூமி பிளவுண்டு அவரை ஏற்றுக்கொண்டது அந்தளவு சோக வாழ்வே அவர் அனுபவித்தது

அவதாரங்களே ஆனாலும் பாவபுண்ணிய கணக்கை அனுபவித்துதான் தீர வேண்டியுள்ளது அல்லது சகலருக்கும் பொறுப்பேற்று அனுபவிக்க வேண்டியுள்ளது

அந்த சீதை என்ற ஆத்மா முழுமையடையாமலேயே அந்தப்பிறவி முடிந்ததால் ; சீதை முழுமையடைய - தன் மணாளனை பாடி துதிக்க – சூடிக்கொடுத்து சுடர்க்கொடியாக வலையவந்து மகிழ ஒரு பிறவி எடுக்க வேண்டியிருந்தது

அதற்கு அவர் தேர்ந்து கொண்ட இனம் தமிழ் ! தேர்ந்து கொண்ட மொழி தமிழ் ! ஆதி மனித சமுகம் தமிழ் என்பதால் அந்த தமிழ் சூத்திர பெண்ணாகவே வெளிப்பட்டு பிராமண சுழலில் வளர கடவுள் ஏற்பாடு செய்தார் !

இந்தியாவின் 90 சதவீத சைவத்தலங்களும் ; வைணவத்தலங்களும் தமிழகத்திலேயே ஏன் உள்ளன ?

ஏனென்றால் வேதங்களும் ஆதியிலே தமிழில் தான் இருந்தன ! தென்னாடுடைய சிவனே ஆதி குரு ! கிரதங்கள் மறுவி வட இந்திய மொழிகள் உருவானபோது இந்தியாவின் சகல மொழிகளையும் சமப்படுத்தி சமஸ்கிரதம் என்ற பாஷையை திராவிட ஞானிகளே உருவாக்கினர்

சமஸ்கிரதம் இன்றைய பிராமண ஜாதியினரின் மொழி அல்ல ! அவர்களின் வீடுகளில் யாரும் பேசுவதில்லை ! ஆனால் அவர்கள் அதை மனப்பாடம் செய்து ஒப்பிக்க பழக்கப்படுத்தப்பட்டனர் ! அதை உருவாக்கியவர்கள் அதை மறந்த போது மனப்பாடம் செய்தவர்கள் தங்களை உயர்ந்தவர்களாக காட்டிக்கொள்ள அம்மொழியை பயன்படுத்திக்கொண்டனர் அவர்களின் முன்னோர்கள் செய்த பெரும் பாவம் தமிழிலிருந்த வேதங்களை – ஓலைசுவடிகளை அழித்தது ! அவர்களின் கணக்கை பெரியாரிடம் அடைந்து தீர்ந்தார்கள் ! இனி அவர்கள் மன்னிக்கப்படுவார்களாக !!

தமிழையும் சமஸ்கிரதத்தையும் இணைத்து பயன்படுத்தாமல் ஆன்மீக நுணுக்கங்களை – மெய் ஞானத்தை உணரவே முடியாது ! கலியுக முடிவுக்கு முன்பு உலகில் வர உள்ள சமரச வேதம் தமிழிலிருந்தே புறப்பட்டு உலகை மூழ்கடிக்கப்போகிறது !

அதுபோல சீதையும் முழுமையடைய – ஒளி சரீரம் பெற்று மரணமில்லா பெரு வாழ்வு பெற தமிழச்சியாகவே வெளிப்பட்டார் ! அக்குழந்தையை பெரியாழ்வார் கண்ண்டெடுக்கும் படி ஒப்படைக்கப்பட்டது !

கோதை என பெயர் வைக்கப்பட்டாலும் ; இன்றைக்கு ஆண்டாளாக ஓவியப்படுத்தப்படுகிற லட்சணமாக அவர்கள் இல்லை ! அது ஓவியம் ! சராசரி தமிழ்ப்பெண்ணாக – கருப்பாக உயரமாக அவர்கள் இருந்திருக்கவேண்டும் கோவிலில் நான் தியானித்தபோது அப்படிப்பட்ட ஒரு நபராகவே - மிண்டி பெண்ணாகவே தரிசனம்

கிடைத்தது

அவர் அங்கும் இங்கும் என்னை அழைத்துக்கொண்டு சென்று பிராகாரத்தில் வரையப்பட்டுள்ள ஓவிய்ங்களை காட்டி எனக்கு விளக்கம் சொன்னதுபோல இருந்தது

அப்போது எனக்கு நாலு வயது குழந்தை போல இருந்தேன்

இந்த தரிசனம் எவ்வளவு நேரம் என்பதை விட என் நாலுவயதில் அப்படிபட்ட ஒரு நிகழ்வு நடந்தது ஞாபகம் வரப்பெற்றேன்
என் தாயார் வைணவ குலத்தில் பிறந்தவள் ; அவளது குலத்தினர் பலர் அந்தக்காலத்தில் முத்திரி வாங்கி நியதிகளை கடைபிடித்தவர்களே

அவர்கள் மார்கழி நீராட்டதிற்காக ஸ்ரீவி வந்தார்கள் ; மண்டபத்தில் கோஷ்டியினர் அமர்ந்து பெரியாள்வார் பெற்றெடுத்த பெண் பிள்ளை வாழியவே என பாடிக்கொண்டிருந்தனர்

அப்போது என்னை ஒரு அக்கா கோவிலை சுற்றிக்காண்பிக்கிறேன் வா என அழைக்க என் அம்மாவும் அனுப்பிவைத்தார்கள்

என்னை அவர்கள் நந்தவனத்திற்கு அழைத்து சென்று இங்குதான் ஆண்டாள் குழந்தையாக அழுதுகொண்டிருந்தாள் என அமர்ந்து காட்டினாள்

அப்புறம் என்னை கோவிலுக்கு கூட்டிப்போய் படங்களை காட்டி விளக்கம் சொன்னாள்

நான் அவளுடனே விளையாடிக்கொண்டிருந்தேன்

அன்று மாலை அங்கிருந்து ஊருக்கு புறப்படும்போது அங்கிருந்து போக மனமில்லாமல் போல இருந்தது

அந்தக்கடை வீதியும் விளக்குகளும் கோவில் வாசலும் எனக்கு பசுமையாக நினைவில் இருக்கிறது

இன்றைய தரிசனத்திலும் அவளே வந்திருந்தாள் ; ஆகவேதான் திருப்பாவை

பாடல்களுக்கு எனக்கு உள்ளுணர்வாக தோன்றியவைகளை விளக்கம் எழுதியுள்ளேன்

ராமர் பூமிக்கு வந்தபோது அவருடன் வானத்திலிருந்து வந்த வானவர் சேனையை விளக்கம் தெரியாமல் வானர சேனையாக்கி விட்டனர்

யுக மாறுதலுக்கென்று இந்த ஆத்மாக்களே பொறுப்பு சுமத்தப்பட்டவர்கள்

அவர்களில் அடியேனும் ஒருவன் ; அதனாலேயே வரப்போகிற கல்கிக்கு முன்பு பூமியில் சமரச வேதத்தை அமுல்படுத்தும் நரனின் (சமரச வேதாந்தி என்ற அல்மஹ்றதி) வருகை குறித்தும் அறிவித்து வருகிறேன்

நாராயணன் நாமத்தினாலும் ஆதிசேஷனின் நாமத்தினாலும் ஆதிசக்தியின் நாமத்தினாலும் சிவனின் நாமத்தினாலும் அல்லாஹ் வின் பேரருள் உங்களை ஆட்கொள்ளட்டும்

மேன்மைகள் உரித்தாகட்டும்